சற்றே நெருங்கி உற்றுப் பாருங்கள்

# ஸூப்பர் ரின்
# அதிக வெளுப்பொளி பாய்ச்சுது...

## இதற்கு ஈடுநிற்க டிட்டர்ஜெண்ட் வில்லை எதுவுமே இல்லை.

**உற்றுப் பாருங்கள்
இப்போது ஸூப்பர்
ரின் வில்லையை—**
கண் கவரும் புதிய
மேலுறை, புதுமை
கமழும் நறுமணம்.




இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

LINTAS RIN 69 2013 TM



சென்னை மாநகர போலீஸ் கமிஷனர் ஸ்ரீபால்

ஒய்.ஜி.மஹேந்திராவின் புதிய நாடகம் ''லஞ்சாபகேசன்'' வழக்கமான சில நகைச் சுவைத் துணுக்குத் தோரணங்களையும் இரட்டை அர்த்த வசனங்களையும் கொண்டிருந்தாலும் ஒரு முக்கியமான சமுதாய பிரச்னையை அழுத்தமானவிதத்தில்சுட்டிக் காட்டுகிறது. வீரேந்திர சின்ஹாவின் மூலக்கதையைத் தமிழ் நாடகமாக்கியவர் வியட்நாம் வீடு சுந்தரம். நல்ல நடிப்பும் சிந்தனையைத் தூண்டும் காட்சிகளும் கொண்ட இந்நாடகம் இந்தக் கருத்தரங்குக்கும் தூண்டுதலாக அமைந்தது.

**திரு. ஸ்ரீபால்:** எந்த ஒரு தீமையை எடுத்துக் கொண்டாலும், அது சமுதாயத்தில் எப்படி உலாவுகிறது, பரவுகிறது என்பதை ஆராய்ந்து பார்க்கும்பொழுது—ஆங்கிலத்தில் சொல்வார்கள் Temptation and opportunity என்று; அதாவது வசீகரம், வாய்ப்பு – இந்த இரண்டு விஷயங்கள் பின்னணியில் இருக்கின்றன. அதைச் செய்ய

ஏ. வி. எம். குமரன்



வேண்டும் என்கிற உந்துதல், அதற்கு நமக்குக் கிடைக்கிறவாய்ப்பு. எனவே தீமையைஒழிக்க வேண்டும் என்று நாம் நினைக்கின்ற பொழுது அந்த உந்துதலையும் அதைச் செய்ய அளிக்கப்படும் வாய்ப்பையும் குறைக்க வேண்டும் அல்லது இல்லாமல் செய்யவேண்டும். பழைய ஆங்கிலப் பழமொழி ஒன்று நினைவுக்கு வருகிறது- Society prepares the crime, the criminal commits it (சமூகம் குற்றத்தைத் தயார் செய்கிறது. குற்றவாளி அதைச் செய்கிறான்) என்பது அப் பழமொழி. இதைத் தொடர்ந்து எழும் கருத்துக்களை இங்கே கூடியிருப்பவர்கள் சொல்லுமாறு கேட்கிறேன்.

**ஏ. வி. எம். குமரன்:** லஞ்சம் என்பது நம் வாழ்க்கையோட இணைந்த நிகழ்ச்சியாகி விட்டது. எங்கு சென்றாலும் லஞ்சம். என் நண்பர் ஒருவர்பம்பாயிலிருந்து சென்னை திரும்ப விமான டிக்கட் வாங்கினார். வெயிட்டிங் லிஸ்டில் அறுபதாம் நம்பர். அதே விமானத்திற்கு டிக்கட் பக்காவாக வைத்திருந்த நாங்கள் ஏர்போர்ட் லவுஞ்சில் காத்திருந்தபோது, அவரும் வந்து சேர்ந்தார். டிக்கட் எப்படி கன்ஃபர்ம் ஆச்சுன்னு கேட்டேன். அவர் சொன்னார்: ''ஒரு பச்சை நோட்டைத் தள்ளினேன். டிக்கட் கிடைச்சுடுத்து''. இன்னும் ஒருமுறை நண்பர் ஒருவருடன் காரில் போய்க் கொண்டிருந்த போது, காரை ஓட்டி வந்த நண்பர் 'ஒன் வே' ரோடில் நுழைந்து போலீஸ்காரரிடம் மாட்டிக் கொண்டார். சற்றைக்கெல்லாம் திரும்பி வந்தவரிடம் ''என்ன சார் நம்பரை எழுதிக் கிட்டாங்களா'' ன்னேன். ''அதெல்லாம் ஒண்ணுமில்லே, கொடுக்க வேண்டியதைக் கொடுத்தேன் அவர் விட்டுட்டாரு'ன்னார். இதைப் போல் அனேக சம்பவங்கள், அன்றாட வாழ்க்கையில் லஞ்சம் கலந்துபோய் விட்டதை உணர்த்துகின்றன.

''லஞ்சாபகேசன்' நாடகத்தில் மகனே தந்தையைக் கைது செய்யவரும் காட்சியில் அவன் அம்மா சொல்கிறாள் ''அப்பா இன்னும் சாப்பிடலே, சாப்பிட்ட பிறகு கைது செய்'' என்று. 'ஏன் சாப்பிடலே' அப்படின்னு மகன் கேட்கறான். 'இன்னிக்கு Gas இல்லே, அதனாலே சாப்பாடு ஆகலே' என்று அவள் சொன்னது தன்னையும் அறியாமல் 'ஐந்தோ பத்தோ கொடுத்தால் Gas கிடைத்துடுமே' என்று போலீஸ் அதிகாரியான மகனே சொல்வது ரொம்ப தத்ரூபமான காட்சி.

லஞ்சத்தையும், கான்ஸரையும் ஒழிக்க முடியாதுன்னு வசனம் வருது நாடகத்துலே. அப்படி ஒழிக்கறதுக்கு எல்லாருடைய

# லஞ்சம் ஒழியுமா?

இணைந்த முயற்சியும் தேவை. தனி ஒருவ ரால் சாதிக்கக் கூடியது இல்லை அது.

**டாக்டர் கலா பாலசுப்பிரமணியன்:** டென் னிஸ் கோர்ட்டுக்கு மகனோடு போயிருந்த போது, பந்து பொறுக்குபவர் வந்து என் கிட்ட சொன்னார். ரூ. 20 கொடுத்தா பைய னுக்குச் சாதகமா ஸ்கோர் சொல்றேன்னு! லஞ்சம் எப்படி சமுதாயத்தின் அடி மட்டம் வரைக்கும் பாய்ஞ்சிருக்கு பாருங்க! படிப்பறிவில்லாதவங்களும் லஞ்சம் வாங்கி தீய முறையில் பணம் சம்பாதிப்பதை நினைக் கும் போது, ரொம்ப வருத்தமா இருக்கு.



⌘ வழக்கறிஞர் ரங்கராஜன்

இதுக்கெல்லாம் என்ன தீர்வு? இப்போ தெல்லாம் மாணவர்கள் —எல்.கே.ஜி மாண வர்கள்கூட ரொம்ப அறிவாளிகளா இருக் காங்க. ஆனா அவங்ககூட பேசறச்சே அவங் களுக்கு நாணயம் இருக்கறதாவே தெரியலே. மகாத்மா காந்தி சொல்வார்: ''கல்வி, அறிவை மட்டும் உயர்த்தினால் போதாது: மாணவரிடம் வாய்மையை, ஒழுக்கத்தை உயர்த்தணும்'' என்று. இதில் நம் கல்வி முறை தவறிவிட்டது. விழிப்புணர்ச்சியூட்டும் நாடகம், சினிமாக்கள் வரவேண்டும். ஆனால் வரும் படங்களெல்லாம் பழி உணர்ச்சியை வளர்க்கவே உதவுகின்றன.

**ரங்கராஜன் (வழக்கறிஞர்)** வாய்ப்பு வசீகரம் பற்றி ஸ்ரீபால் குறிப்பிட்டார். அத் துடன் அத்தியாவசியம் என்ற ஒரு வார்த் தையைச்சேர்த்துக் கொள்ளவேண்டும். இன்று பணக்காரர் ஏழை என்ற பாகுபாடு இல்லா மல் எல்லோரும் லஞ்சம் வாங்குகிறார்கள். கொடுக்கிறார்கள். அதற்கு ஒரு நிர்ப்பந்தம் இருப்பதை நாடகத்தில் காட்டியிருக்கிறார் கள். முதலில் நிர்ப்பந்தத்தில் வாங்கியது, போகப் போகத் தவிர்க்க முடியாததாகி விடு கிறது. குடிப் பழக்கத்துக்கு அடிமை யாவது போல் லஞ்சப்பழக்கத்துக்கும் அடிமை யாகி விடுகிறார்கள். எவ்வளவு பணம் இருந் தாலும் மேலும் மேலும் லஞ்சம் வாங்கத் தோன்றுகிறது.

ஒண்ணு முக்கியமா சொல்லணும்— லஞ்சத்தை ஒழிக்கணும்னு மனித இதயத்துல இருந்துதான் ஆரம்பிக்கணுமே தவிர லஞ்



⌘ நடனக்கலைஞர் ஜெயலக்ஷ்மி

சத்தையே சட்டமாக்க முடியாது. நாட கத்துல சொல்லியிருக்கற மாதிரி அப்படி லஞ் சத்தைச் சட்டமாக்கினால் ஐந்து ரூபாய் கொடுக்குமாறு சட்டம் இருக்கும் இடத்தில் ஆறு ரூபாய் கேட்பார்கள். எவ்வளவுக்கெவ் வளவு சட்டபூர்வமாக்குகிறோமோ அதுக்கும் மேல் கேட்கத்தான் கேட்பாங்க. அரசால் லஞ்சத்தை சட்டத்தின் மூலமா அங்கீகரித்து விடக்கூடாது. தனக்குக் காரியமாக வேண் டும் என்று வரும்போது எல்லோரும் லஞ்சம் கொடுக்கவே செய்கிறார்கள். சுயநலம்தான் காரணம்.

⌘ நல்லி குப்புசாமி





# கொஞ்சமேனும் குறையுமா?

**ஜயலக்ஷ்மி:** இதுவரைக்கும் எல்லோரும் பொதுவாழ்க்கையில் லஞ்சம் பற்றிப் பேசினார்கள். ஆனா வாஸ்தவத்தில் ஒவ்வொரு குடும்பத்துக்குள்ளேயும் இந்த லஞ்சம் கொடுக்கும் பழக்கம் இருக்கு. ஒவ்வொரு தாயும் தன் குழந்தைகளிடம் இந்த ஹோம் ஒர்க்கை முடித்தால் சாக்லேட் வாங்கித் தருகிறேன் என்ற ரீதியில் பேசுகிறாள். எல்லாரும் தெரிஞ்சு செய்யற தப்பு இது. நானே கூட செய்யறேன். தூங்கறவனை எழுப்ப முடியும். தூங்குவதுபோல் பாசாங்கு செய்பவர்களை எழுப்பவே முடியாது. அந்த மாதிரி தெரிஞ்சே தப்பு செய்யறவங்களை என்ன செய்யறது...?

**நல்லி குப்புசாமி:** ஒருத்தர் லஞ்சம் வாங்கறதைக் கண்டு பிடிச்சு தண்டிக்கலாம். ஆனா அதை ஒழிக்கிறது ரொம்ப கஷ்டம். காரணம்—தேவைதான். கானடாவில் ஒரு போலீஸ் கான்ஸ்டபிளுக்கு 9000 ரூபாய் சம்பளமாம்! ஒவ்வொருத்தர் குடும்பத் தேவையும் பூர்த்தியாகிற அளவுக்கு சம்பளத்தைக் குடுத்துட்டா லஞ்சம் ஏன் வாங்கறாங்க? என்னிக்கு தேவைகள் பூர்த்தியாறதோ அன்னிக்கு லஞ்சம் ஒழியும்ங்கறது என் தாழ்மையான அபிப்பிராயம்.

**திருமதி பாலகிருஷ்ணன்:** நான் ஆஸ்பத்திரியில் வேலை செய்கிறேன். பல சமயம் ஆஸ்பத்திரி சிப்பந்திகள் தங்கள் வேலையைச் செய்யவே லஞ்சம் கேட்பதாகக்கேள்விப்பட்டு விசாரிக்க முற்படுவோம். லஞ்சம் கொடுத்தவர்கள் அந்தச் சமயத்தில் உண்மையைப் புகார் வடிவத்தில் எழுதித்தர மறுப்பார்கள். 'பாவம் ஏழைமையினால்தான் கேட்கிறார்கள். அழைப்பட்டவர்களை நாம் மாட்டிவைக்கக் கூடாது விட்டுவிடுங்கள்'' என்பார்கள். ஜிப்புறம் லஞ்சம் வாங்கியதை எப்படி ஊர் ஜிதப்படுத்த முடியும்? நிரூபிக்க முடியும்?

**'கல்கி' ஆசிரியர்:** 'லஞ்சம் வாங்க வேண்டியதைவிட கொடுக்க வேண்டிய அவசியம் அதிகமாயிருக்கிறது. ஒருவர் நூறு ரூபாய் கொடுத்து தன் விமான டிக்கெட்டுக்கு ஸீட் ரிசர்வேஷன் பெறுகிறார் என்றால் என்ன



✱ ஒய். ஜீ. மகேந்திரா: ''நாடகத்தை அரங்கேற்றியதைவிட அதன் உடன்விளைவான இந்தக் கருத்தரங்கம் அதிக மகிழ்ச்சி தந்தது.''

காரணம்? நூறு ரூபாய்க்குப் பார்த்தால் அவருக்கு அன்றைய பொழுது வீணாகி தொழில் அல்லது வியாபாரத்தில் ஆயிரமோ, பத்தாயிரமோ நஷ்டமாகி விடும். அதனால்தான் நமது சமூக அமைப்பு லஞ்சம் பெறுவதை எளிதாக்குகிறது. லஞ்சம் கொடுப்பதை அத்தியாவசியமாக்குகிறது. அந்த அமைப்பை மாற்றினால் லஞ்சத்தை அடியோடு ஒழிக்காவிட்டாலும் பெருமளவு குறைக்கவாவது செய்யலாம். இது சம்பந்தமாக ராஜாஜி இரண்டு விஷயங்கள் சொன்னார்: செகுலரிஸம் எனப்படும் மதச்சார்பின்மையை வலியுறுத்துவதால் பய பக்தி அடியோடு குறைந்துவிட்டது. இரண்டாவதாக எல்லாவற்றிலும் அரசாங்கத்தின் குறுக்கீடும் கட்டுப்பாடுகளும் அதிகமாகிவிட்டது. உண்மையான சுதந்திரம் இருந்தால் நிச்சயமாக லஞ்சம் குறையும்.

**எஸ். வி. ரமணன்:** மேல் நாடுகளிலும் தான் லஞ்சம் வாங்குகிறார்கள். ஆனால் சட்டத்தை மீறும் காரியங்களுக்காக இருக்கும். இங்கேயோ சட்டபூர்வமாய் நடக்க வேண்டிய காரியத்துக்குக்கூட அல்லவா லஞ்சம் தரவேண்டியுள்ளது!

**ஸ்ரீபால்:** ஆழ்ந்து யோசித்தால் ends



இக் கருத்தரங்குக்கு **உயர்நீதிமன்ற நீதிபதி திரு. நடராஜன்** அனுப்பிய செய்தியில் குறிப்பிடுகிறார்: 'லஞ்ச ஊழலுக்கு மனிதனின் பேராசை ஒரு பெருங்காரணமாக இருந்தாலும் பற்பல வேளைகளில் தவிர்க்க முடியாத சூழ்நிலைகளும் அவனை கீழ்த்தரமான செயலைச் செய்யத் தூண்டுகின்றன. அதனால் அவன் மன வலிமை இழந்து, ஒரு முறை வழுக்கி விழுந்தபின் பலமுறை வழுக்கி விழுவதில் குற்றமோ தவறோ காண்பதில்லை. அதற்குநியாயம் கூட கற்பிக்கிறான்! இந்தத் தீவினையை அடக்கவேண்டுமானால் மனிதன் தன் ஆசைகளுக்கும், தேவைகளுக்கும் அணை போடவேண்டும். அதோடு சமூகக் குறைபாடுகளும் நீங்கவேண்டும். ஆனாலும் லஞ்சத்தை முழுக்க ஒழிக்க முடியாது. பெண்ணாசை, பொன்னாசை, மண்ணாசை மூன்றும் மனிதனோடு உடன் பிறந்த நோய்கள். ராஜாஜி சொன்னார்: ''விபசாரம், சூதாட்டம், மதுப்பழக்கம் இத் தீமைகளை அடியோடு ஒழித்துவிட முடியாது. கட்டுப்படுத்தமட்டுமே செய்யலாம்'' என்று. இந்த வரிசையில் லஞ்சத்தையும் சேர்த்துக் கொள்ளலாம்.

and means என்கிற பழைய கேள்விக்குப் போய்விடுவோம். நம் காரியத்தை எப்படியாவது முடித்துவிடவேண்டும் என்கிற எண்ணம் நம்மில் பலருக்கு இருக்கு. அதற்கு மேற்கொள்ளும் வழி தவறானாலும் பரவாயில்லை என்ற எண்ணம் பரவி வருகிறது. எனவே, லஞ்சம் கொடுப்பவர்களும் இருக்கிறார்கள். வாங்குபவர்களும் இருக்கிறார்கள். விஞ்ஞான ரீதியாகப் பார்த்தாலும் பொருளாதார முன்னேற்றத்துடன் கூடவே குற்றங்களும் அதிகரிக்கத்தான் செய்யும். வளர்ச்சியின் உடன் விளைவான தீமை இரு வகையானது. முதலாவது சட்டத்தை மீறும்செயல்—சட்டம் அளிக்கும் தண்டனையால் ஏற்படக் கூடிய இழப்பைவிட லஞ்சம் தருவது லாபமாயிருந்து விடுகிறது. இரண்டாவது விரைவாக ஒரு காரியம் ஆகவேண்டும் என்று கருதிச் செய்யப்படும் செயல். பத்து நாட்களில் ஆகக்கூடியதை இரண்டு நாட்களில் செய்து கொடுக்க முடியுமென்றால் அதற்குச் சிறிது பணம் தந்தால் தவறென்ன என்ற எண்ணம். போதுமான அளவு மேற்பார்வை இருந்தால் லஞ்சத்தை ஓரளவு கட்டுப்படுத்தலாம்.

லஞ்சம் வாங்குகிறவர்கள் விசுவாசமில்லாதவர்கள்தான். கடமையைப் போற்றாதவர்கள். நமது கலாச்சாரத்தில் இந்தப் போக்குக் கிடையாது. உரிமைகளைவிட கடமைகளையே வலியுறுத்துகின்றன நமது பழம் பெரும் நூல்கள். நமது தற்போதைய கல்வி முறையும் சமுதாய அமைப்பும் இந்தப் புராதனப் பண்பாட்டை எதிரொலிக்க வேண்டும். குறுக்கு வழியில் முன்னேறியவர்களைப் போற்றி நேர்மையான எளியவர்களை அலட்சியப்படுத்தும் இன்றைய நிலை மாறி, பழங்கால கலாச்சாரப்படி வயதுக்கும், நேர்மைக்கும் மதிப்புத் தரும் முறை வரவேண்டும். அதற்காக மேற்கத்திய நாகரீகத்தை ஒதுக்க வேண்டும் என்று சொல்லவில்லை. பொருளாதார வளர்ச்சிக்கு அதைப் பயன் படுத்திக் கொண்டு பாரம்பரிய பண்புகளைக் கை விடாமல் இருக்கவேண்டும்.

'லஞ்ச லாவண்யம்' என்று சொல்வார்கள். சம்ஸ்கிருதத்தில் லவணம் என்றால் உப்பு என்று பொருள்படும். உப்பு கூடினாலும், குறைந்தாலும் சுவை கெடுவது போல் உடலும் மனமும் ஒரு கட்டுப்பாட்டுக்கு உட்படாமல் உயர்ந்தாலும், தாழ்ந்தாலும், இசைகேடாகிவிடும். மற்றொரு இரட்டைச் சொற்றொடரான பயபக்தியும் ரொம்ப முக்கியம். யாருக்கும் தெரியாமல் செய்வதில் தவறில்லை என்ற எண்ணமும் இருக்கக் கூடாது. இறையுணர்வை நமது கலாச்சாரம் நன்றாகவே உணர்த்துகிறது. மேல் நாடுகளில் உள்ளது போல் கலாச்சார பிரக்ஞையை மாணவப் பருவத்திலிருந்தே புகுத்த வேண்டும். அதுதான் பிரச்னைக்கு தீர்வு காண வழி.

மற்றொரு வழி ராஜாஜி கூறியது போல் விதிமுறைகளைக் குறைத்தல். ஆனால் அடிப்படையா பார்த்தா மனிதப் பண்புதான் நன்மை தீமைகளுக்குக் காரணமாயிருக்கிறது. அவரவர் கடமையைப் போற்றிச் செய்ய வேண்டுமே தவிர மேற்பார்வையாளருக்கு பயந்து கொண்டு செய்தால் அந்த ஒழுங்கு நிரந்தரமானதாக இராது. கமிஷ்னர் வருகிறார் என்பதற்காக ஒரு போலீஸ்காரர் ட்ரிம்மாயிருந்து பிரயோஜனமில்லை. எப்போதும் அவர் ட்ரிம்மாயிருந்து ஒழுக்கமாகக் கடமையாற்றவேண்டும். தானே உணர்ந்து கட்டுப்படுவதுதான் ஒழுக்கம். இதைத் தான் நம் கலாச்சாரம் உணர்த்துகிறது.

**ரங்கராஜன்:** மனுஷன் தப்பு பண்ண ஒரு காரணம் பயமின்மை; இரண்டாவது அவனுடைய தேடுதல், தூண்டுதல். இப்போதெல்லாம் லஞ்சம் வாங்கும் பழக்கத்தோடு திரும்பத் திரும்ப அப்படி வாங்குவதில் தப்பில்லை என்ற எண்ணம் வளர்ந்து கொண்டிருக்கு. இதைச் சட்டம் அனுமதிக்கக் கூடாது. இன்னும் கடுமையான தண்டனைகள் இருக்கணும். முக்கால்வாசிப்பேர் பயத்தினால்தான் கட்டுப்பட்டு இருக்காங்க. இயல்பான நன்நடத்தை, கடவுள் நம்பிக்கை இவற்றைவிட பயம், அச்சம் என்பவைதான் சமுதாயக் கட்டுப்பாட்டை நிர்ணயிக்கின்றன.

ராஜாஜி அடிக்கடி சொல்லுவார்: அரசாங்கக் கொள்கைதான் மனுஷனை நல்லவனாகவோ, கெட்டவனாகவோ ஆக்குகிறது என்று. பிறக்கும்போதே ஒருவன் கெட்டவனாக இருப்பதில்லை. சூழ்நிலையை உருவாக்கும் அரசு அமைப்பானது அதிகமாகக் கட்டுப்படுத்தினால் தனி மனிதனின் அகம் பாவத்தை, சுயநலத்தை நிச்சயமாகத் தூண்டி விதிகளை மீறச் செய்கிறது. ஆகையால் செயல் முறைகளில் கட்டுப்பாடுகளைக் குறைத்து, தண்டனை விசாரணை என்று வரும்போது கட்டுப்பாடுகளை அதிகரிக்க வேண்டும். இப்படிச் செய்தால் ஒரே அடியாக ஒழிக்க முடியாவிட்டாலும் லஞ்சத்தைக் கட்டத்தட்ட அடக்க முடியும்.



○ கலந்துரையாடலில் பங்கேற்றவர்களில் சிலர். பேசுபவர்: பத்மா குமரன்.

**பத்மா குமரன்:** மேலை நாடுகளில் உள்ள சமுதாயப் பிரக்ஞை நம் நாட்டில் இல்லை. அங்கே ஒரு தவறு நடந்தால் அதை எதிர்க்க எல்லாரும் முன் வராங்க. இங்கே அப்படி இல்லையே. உதாரணமாக அடாவடிச் செய்

யும் ஒரு ஆட்டோ டிரைவரை 'வா போலீஸ் ஸ்டேஷனுக்கு'ன்னு கூப்பிட்டால் அவன் இன்னும் நாலு கூட்டாளிகளை சேர்த்துக்கிட்டு நம்மை அவமானப் படுத்தி அனுப்புறான் அல்லது தைரியமாக ஸ்டேஷனுக்கு வந்து கேஸ் பதிவு ஆகி நாம் திரும்புவதற்குள் போலீஸிடம் பணம் தள்ளி கேஸை வாபஸ் பெறச் செய்கிறான்! என் வாழ்க்கையிலேயே இது மாதிரி ஒரு சம்பவம் நடந்தது. ஒரு நிலைமையை எதிர்த்தா நமக்குப் பக்கபலமா சமுதாயமோ சட்டமோ கூட ஆதரவும், ஊக்கமும் தருவதில்லை.

ப்ளூ ஃபிலிம்கள் காட்டிய ஒரு டாக்டரை 250ரூபாய் ஃபைனோடு விட்டுவிட்டார்கள். அவரைச் சிறையில் போட்டிருந்தால், திரும்பவும் அந்தத் தப்பை செய்திருக்க மாட்டார்; மற்றவர்களுக்கும் எச்சரிக்கையா இருந்திருக்கும். தண்டனைகள் கடுமையா இருக்கணும். சட்டமும் சமுதாயமும் தவறை எதிர்க்க உதவணும்.

**ஸ்ரீபால்:** சட்டம் என்பது சொர்க்கத்திலிருந்து வந்ததல்ல. ஜனநாயக நாட்டில் நாமே உருவாக்கியதுதான். அதே சட்டத்தை விரும்பிக் கீழ்ப்படிய வேண்டும் என்ற நினைப்பை உண்டாக்குவதும் மனிதன் தான். எனவே இரண்டிலும் நம் பங்கு உண்டு.

தண்டனைகளைக் கடுமையாக்கினால் மட்டும் போதாது. அவை உடனுக்குடன் வழங்கப்படுமாறு துரிதப்படுத்த வேண்டும். இது ஏன் சாத்தியமாவதில்லை என்று வழக்கறிஞர்களுக்குத் தெரியும். குற்றத்துக்கும் தண்டனைக்கும் இடையே கோர்ட், விசாரணை என்ற மிகப் பெரிய இடைவெளி இருக்கிறது. ஒரு தீய காரியத்தைச் செய்வதால் உடனே லாபம் இருக்கிறது. உதாரணமாக பிக் பாக்கெட் செய்வது. அதற்குத் தண்டனை கிடைக்கக்கூடிய சாத்தியக்கூறுகள் தூரத்தில் நின்று கொண்டுதான் பயமுறுத்தும். திறமையான வக்கீலின் வாதத்தால் தண்டனை கிடைக்காமலே கூடப் போகலாம். எனவே, லாபத்துக்கு நூறுசதம் உத்திரவாதம், தண்டனைக்கு ஐம்பதுசதம் சாத்தியக்கூறு; நம் சமுதாய அமைப்பு அப்படி இருக்கிறது. தண்டனைகள் உடனுக்குடன் விரைவாகக் கிடைத்தால்தான் குற்றங்களைக் குறைக்க முடியும். அதோடு சட்டங்களை உருவாக்கும் நாம் அவற்றுக்குக் கீழ்ப்படியவும் கற்கவேண்டும். இதில் தவறிவிட்டால் தண்டனையை ஏற்றுக் கொள்ளும் மனப்பக்குவம் வேண்டும். நாம் யாராயிருந்தாலும் சரி; தவறு செய்துவிட்டால் தண்டனையை ஏற்றுக் கொள்ளவேண்டுமே தவிர லஞ்சம் கொடுத்துத் தப்பிக்க முயற்சி செய்யக் கூடாது.

படங்கள்: **ஏ. வி. பாஸ்கர்**

தொகுப்பு: **எஸ்ஸார்**

---

*போலீஸ் அதிகாரி: "போலீஸ் பாதுகாப்பு கேட்கறீங்களே, எதிர்க்கட்சி ஆசாமிங்க தாக்கிடுவாங்கன்னு பயமாயிருக்கா?"*

*தலைவர்: "ஊஹூம்! தேர்தல் டிக்கெட் கிடைக்காத என் கட்சிக்காரங்க தாக்கிடுவாங்கன்னு தான் பயமாயிருக்கு!"*




*தலைவர்: "ஏழைகள் சிரிப்பே எங்கள் லட்சியம்! தொகுதிக்குத் தொகுதி ஜோக் எழுத்தாளர்களை எங்கள் கட்சி வேட்பாளர்களாக நிறுத்தியிருப்பது அதனால்தான்!"*

—உ. ராஜாஜி.



"எனது, பதினொரு
வயதுக் கால்பந்தாட்டக்
கில்லாடி. அவன், ஒரு
நாள் உலகிலே மிகச்
சிறந்த 'பார்வர்டு'
ஆவான்!"

# போர்ன்விடாவின் இனிமைக் காலம்

போர்ன்விடா அளித்தவரை பாச மனங்கள்
நேசத்தோடு நினைத்து மகிழும் ஒருநாள்!

1 கிலோ பேகிலும்
கிடைக்கிறது.
அதன் உள்ளே ஒரு
இலவசக்
குவளை.

வளரும் குழந்தைகள் வேறு எந்த
மால்ட்டட் பானங்களையும்விட
போர்ன்விடாவை விரும்பு வதேன்?
போர்ன்விடா அருந்தி வளர்ந்த இரு
தலைமுறையினர் தங்களுடைய
குழந்தைகளுக்கு போர்ன்விடா தவிர
வேறு எதுவும் உகந்ததல்ல என்று
வலியுறுத்திக் கூறுவதேன்?

அதில்...உற்சாகம் துள்ளும் சுவை
மட்டுமல்ல. காட்பரியின் பிரபல
பெயர் மட்டுமல்ல. அவற்றைவிட
அதிகமோ அதிகம். அதுதான்
போர்ன்விடா! அதோடு வளருங்கள்.

காட்பரிஸ்
## போர்ன்விடா
நல்ல வளர்ச்சி,
போர்ன்விடா பயிற்சி.




OBM/3764 TAM


மட்டமான
தேர்தல் பிரச்சார விஷ வாயு
வோட்டுகள்


போதும்!.. வேஷத்தைக் கலைச்சுட
வேண்டியது தான்!
எம்.ஜி.ஆர். அமோக வெற்றி


கிரிக்கெட்டிலே என்னைச் சேர்த்துக்காட்டுப் போலயேன்!
கிட்டிப் புள் விளையாடப் போறேன்!
இ.காங்கிரஸ்

கல்கி



1984 டிசம்பர் 30
மலர் : 43 இதழ் : 22
ரக்தாக்ஷி மார்கழி 15



# நடந்து முடிந்த தேர்தல்

இந்த இதழ் நேயர்களின் கரங்களை அலங்கரிக்கும் போது தேர்தல் முடிவுகள் வெளியாகிக் கொண்டிருக்கும். வெற்றி பெறுகிறவர் கர்வ மடையாமல் தம் மீது சுமத்தப்பட்டுள்ள மாபெரும் பொறுப்புக்களை எண்ணி அடக்கமுடன் செயலாற்றட்டும். தோற்றவர் மனம் தளராமல் எதிர்ப்புப்பணியில் இறங்கட்டும். ஜனநாயகத்தில் வெற்றி தோல்வி என்பது பெயரளவில்தான். காரணம் எதிர்ப்புப் பணி, ஆட்சி புரிவதை விடவும் முக்கியமானது. எனவே வென்றவர், தோற்றவர் இருசாராருக்கும் நமது இதயபூர்வமான நல்வாழ்த்துக்கள்.

ஆட்சியில் இருப்பவரும் சரி, எதிர் அணியில் உள்ளவரும் சரி, மக்கள் நன்மையை, தேச முன்னேற்றத்தையே கருதுகின்றனர். அதை அடைவதற்கான மார்க்கம் எது என்பதில் தான் வேற்றுமை. இந்த அடிப்படையை மக்களும், சிறிய பெரிய தலைவர்களும் உணர்ந்து செயல்பட்டால் நடந்து முடிந்த தேர்தலில் நாம் கண்ட பல அசம்பாவிதங்களைத் தவிர்த்திருக்கலாம்.

அதிகார துஷ்பிரயோகங்கள் நிறையவே காணப்பட்டன. திடீரென்று அரசு ஊழியரிடம் பெரும் கருணை கொண்டு பல கோரிக்கைகளை ஏற்றுச் சலுகைகளை அறிவித்து அவர்கள் ஒத்துழைப்பைக் கோராமல் கோரியது அ. தி. மு. க. அரசு. என்றோ நடந்திருக்க வேண்டிய புயல் நிவாரணப் பணிகள் தேர்தலுக்குச் சில தினங்கள் முன்பு தான் சுறுசுறுப்படைந்து பணமும் வேஷ்டி புடவைகளும் வினியோகமாயின. தேர்தலுக்கு நாள் குறித்த பின்னர் பல சலுகைகளை அறிவித்ததற்காக குஜராத், மத்தியப் பிரதேச, ஒரிஸ்ஸா மாநில இ. காங்கிரஸ் அரசுகளைத் தேர்தல் கமிஷன் தட்டிக் கேட்க நேர்ந்தது. இன்னும் எத்தனையோ அத்துமீறல்கள்.

தேர்தலில் பணபலமே பிரதானமாக விளங்குகிறது. வேட்பாளர் எவ்வளவு வேண்டுமானாலும் செலவிட்டு விட்டுக் கட்சிப்பணம் என்கிறார். ஆளும் கட்சிக்குப் பணம் சேர்ப்பது எளிதாக இருக்கிறது. கணக்கோ, வழக்கோ கிடையாது.

சொற்பொழிவுகள் கொள்கை விளக்கமாக இராமல் வசைமாறிப் பொழிந்து உணர்ச்சிகளைக் கொந்தளிக்கச் செய்வனவாய் உள்ளன.

30 கோடியே 80 லட்சம் வாக்காளர் கொண்ட மிகப் பெரிய ஜனநாயகம் என்ற வரட்டு ஜம்பத்தினால் பயனில்லை. நமது ஜனநாயகம் அர்த்தமுள்ளதாகத் தேர்தல் சீர்திருத்தங்கள் தேவை.

சிறுபான்மை வோட்டுப் பெற்ற ஒரு கட்சி பெரும்பான்மை பலத்துடன் ஆட்சிக்கு வருவதைத் தவிர்க்க வேண்டும்.

ஒரே வேட்பாளர் தொடர்ந்து இரண்டு தடவைக்கு மேல் தேர்தலில் நிற்கக் கூடாது என்ற விதி வகுத்தால் இளந்தலைமுறைத் தலைவர்கள் உருவாகவும் உட்கட்சி ஜனநாயகம் வலுப்பெறவும் உதவும். வேட்பாளருக்குக் குறைந்தபட்சத் தகுதி நிர்ணயிப்பதோடு அவர் திருப்திகரமாகச் செயல்படவில்லை எனில் திரும்ப அழைத்துக் கொள்ள வாக்காளருக்கு உரிமை வேண்டும். கட்சி மாறினால் மீண்டும் வாக்காளரைச் சந்தித்து அங்கீகாரம் பெறுமாறு சட்டம் தேவை.

வாக்குச் சாவடிக்கு வாக்காளர் வர வாகனம் தருவதைக் குற்றமாக்க வேண்டும். கட்சிகளின் வரவு செலவுக்குக் கட்டாயத் தணிக்கை, கட்சிகளுக்குக் கம்பெனிகள் நன்கொடை தரத் தடை ஆகியன அத்தியாவசிய சீர்திருத்தங்கள்.

முக்கிய பிரசார சாதனங்களான டி. வி.யும் வானொலியும் சுதந்திர கார்ப்பரேஷனிடம் ஒப்படைக்கப்பட வேண்டும்.

யார் ஆட்சிக்கு வந்தாலும் சரி, அடுத்த தேர்தலுக்குள் இவற்றைச் செய்து காட்டட்டும்.

# 11

## திருப்பதி உண்டிக்குப் போட்டி

சிந்து அந்தக் குறவஞ்சி நாடகத்தை நாட்டுக்கு உவமையாகக் கூறிக்கொண்டு போக,

வர்மனின் மனத்தில் சின்னச் சின்ன ஊற்றுகளாக உணர்ச்சிகள் கொந்தளித்தன.

அவனது அகக்கண் இன்னொரு கண் விழித்து, விசாலமான ஒரு பெரும் பரப்பைப் பார்த்தது.

சிந்துவின் குரல் காதில் ஒலித்தது.

''செஞ்சுகா (செஞ்சுலட்சுமி) பட்ட பாட்டை நாட்டின் பெண்கள் படுகிறார்கள்!''

என்ன அருமையான உதாரணம் அது! ஒரு கத்திபோல் மனத்தில் சொருகுகிறதே!

இதற்கு முன் இப்படி பரந்தநோக்குடன் பெண்களை ஒருங்கு நினைக்கு மனப்பான்மை வந்ததில்லையே!

அவன் ஊரும், பாளையமும் எவ்வளவு சொற்பங்களாகத் தோன்றின இப்போது?

ஒருநாட்டையே மனத்தில் உருவகப்படுத்தும் ஆச்சரியமான புதிய ஞானம் உதித்து விட்டதே! என்னே புதுமையான அனுபவம்!

அந்த அனுபவத்தில் கேவலம் செஞ்சுலட்சுமி மட்டும் அல்ல, நாட்டில் எல்லாப் பெண்கள் படுவதும் அவனைத் துன்புறுத்துவது போல் தோன்றியது.

செஞ்சுலட்சுமி ஒரு சின்னம்! அவ்வளவுதான்!

பெருமூச்சுவிட்டான் அவன்.

சிந்துஅவனைத்தடாகத்தின்அருகே அழைத்




துப் போக, ''எங்கே செஞ்சுலட்சுமி?'' என்றான் சிறிது ஆத்திரமுடன்.

''செஞ்சுகாவா? வாருங்கள்! அழைத்துப் போகிறேன்'' என்றாள் அவள்.

தடாகத்தைத் தாண்டி உய்யான வனம் ஒரு வனமாகவே மாறி இருந்தது. இருட்டைப் பிடித்து வைத்தாற்போல் நெருக்கமான மர அடர்வுகள்! சற்றைக்கு அப்பால் ஒரு சின்னக் குன்று.

வனத்தின் ஊடே அழைத்துப் போனாள்.

கிளைகள் தந்த நெருக்கங்களில் குனிந்தும் குறுகியும் போக வேண்டி வந்தது.

திடீரென்று அந்தி ஆகிவிட்டது போல் மந்தமும் சிள்ளிரைச்சலும் சூழ்ந்தன.

அதில் சில நிமிட நேரம் பிரயாணம் செய்த பிறகு சட்டென்று எதிர்ப்பட்ட திறந்தவெளியும் அதில் பழமையாக நின்றிருந்த மாளிகையும் ஆச்சரியமாக இருந்தது.

ஒரு அரண்யவாசம் போல இருந்தது. தூணும்தூம்பாய்களும்பாசி படர்ந்திருந்தன. மாடங்களும் சாளரங்களும் துருவேறினாற் போல் பழசாகி இருந்தன.

கல்படிகளில் இருவரும் ஏறினார்கள்.

உள்ளே அடுத்தடுத்து அறைகள் வழியாகச் சென்று; ஒரு பெரும் கூடத்துள் போய் நின்றாள் சிந்து.

முற்றத்தை அடுத்த அந்த கூடத்தில்பத்துப் பன்னிரண்டு திடகாத்திர மனிதர்கள் விறு விறுப்பாக ஒருசர்ச்சையில் ஈடுபட்டிருப்பதைக் கவனித்தான்.

சிந்துவும், இன்னொரு ஆளும் வருவதைப் பார்த்து அவர்கள் தங்கள் பேச்சை நிறுத்த, சுற்றும் முற்றும் பார்த்து சிந்து, ''எங்கே செஞ்சுகா?'' என்று கேட்டாள்.

''இதோ அக்கா!'' என்று ஒரு மூலையிலிருந்து செஞ்சுலட்சுமி துள்ளி வர....,

வர்மனின் மனத்தில் ஒரு ஜீவன் துள்ளி வந்தது.

''இதோ பார் செஞ்சுகா! உன்னை நேரில் பார்த்தால்தான் அவர் மனம் சமாதானம் ஆகும் என்கிறார்!'' என்றாள் சிந்து!

செஞ்சுகா அவன் முன்னால் வந்து ஒரு செம்பொன் விக்கிரகமாக விகசிக்க வர்மனின் கண்கள் பனித்தன.

நீண்ட ஈர விழிகளோடு அவளைப் பார்த்தான்.

மனத்தில் புகையாகக் கவிந்த ஒருவியாகூலம் மெதுவாகக் கரைந்து கொண்டிருந்தது.

நிச்சயம் முந்தின இரவு பார்த்தது நாடகந்தான்! நிஜமல்ல, இதோ அவன் முன்னால் செங்கா ஒரு துள்ளலும், விள்ளலுமாக நிற்கிறாளே, என்று நினைத்தான்.

இருந்தாலும், அவன் இரவு அடைந்த மானசிகச் சுமையின் துயரம் அவனுக்கு அளவிலா தாபத்தை ஏற்றியிருக்க மௌனமான தழுதழுப்புடன், ''நல்லவேளை அம்மணி! உங்களை நேரில் பார்த்தேன்! இல்லாவிடில் ஒரு துயரச் சுமை எனக்கு வாழ்நாள் முழுதும் இருந்திருக்கும்'' என்றான்.

அவளை மீறியும் கண்கள் நீர்க்கூடு கட்டின.

மார்புகள் ஏக்கத்தோடு ஏங்கி அமிழ்ந்தன.

''ஐயா, நான் நடித்தேன்! அவ்வளவே!'' என்று குழல்மிழலையாக அவள் சொல்ல,

அவன் மனம் அத்தனையிலும் பரவசம் விரவியது.

''நடிப்புத்தான் எவ்வளவு பாதித்து விடுகிறது! இரவு உறக்கம் வரவில்லை! கண்முன்னே யாரோ துன்பப்படும்போது நான் வாளா விருப்பது போல இருந்தது. நான் துயர்ப்பட்டதை வர்ணிக்க இயலாது'' என்றான் அவன், தழுதழுப்பு குறையாமல்.

செங்கா மேலே பேசுவதறியாமல் குழைந்து நிற்க, ''வீரரே!'' என்று சிந்து கூறி அவளை அந்தக் கூட்டத்தின் பக்கம் அழைத்துப் போனான்.

அங்கே நின்று போட்ட மெத்தையில் நடு நாயகமாக வீற்றிருந்த சரம்பள்ளிப்பாளையம் அதிபதி வீரண்ணத் தேவரின் முன்பே கொண்டு விட்டாள்.

அவரும் அவளை ஆதரவுடன் பார்த்துக் குசலம் விசாரித்து, அவன் தந்தையை அறிந்திருப்பதாகவும் கூறி,

''அவர் என்னவோ பரங்கியரோடு வியாபாரம் செய்வதாகச் சொல்லிப் புறப்பட்டவர்தான் அப்புறம் ஊர் திரும்பவே இல்லை. நீ அவரைத் தேட, வந்திருப்பதாகச் சொன்னார்கள். அதையும் கவனிப்போம்! இப்போது நாடே குழப்பத்தில் இருக்கிறது. இதைச் சீர்திருத்தம் செய்யவேணும் என்று ஐம்பத்தாறு பாளையக்காரரும் ரத்த உடன்படிக்கைப் போட்டு இங்கே வந்திருக்கிறோம். நாட்டு நடப்பு தெரியுமில்லையா...?''

''ஓரளவு தெரியும்!''

''நவாபு பதவிக்கு இங்கே சந்தாசாகிப்புக்கும் முகம்மதலிக்கும் சண்டை! இவர்கள் பின்னே இருப்பவர்கள் பரங்கியர்கள்! சந்தாசாகிப் பக்கம் பிரெஞ்சுக்காரன்! முகம்மதலி பக்கம் இங்கிலீஷ்காரன்! ஆக, மொத்தத்திலே கேவலம் பரங்கிக்காரனை அழைக்கும் துப்புக் கெட்ட நாடாப் போயிட்டது! இப்போ என்னடான்னு அவன் (பரங்கிக்



காரன்) சட்டம் பேசுறுன். சட்டம் போடறுன், கிஸ்தி வசூல் பண்ணறுன். சனங்களை அடிக்கிறுன். துன்பப்படுத்தறுன். போன மாசம் இந்தப் பிரெஞ்சுக்காரங்க நாலு ஐயன் மாருங்களைத் தூக்கிலே போட்டிருக்கான்...''

''அது பெருத்த அநியாயம்!'' என்று ஆத்திரமாக இடைமறித்தார் ஒரு பாளையக்காரர்.

''நீதான் அவனுக்கு இடம் கொடுத்திட்டியே!'' என்று அவரைப் பார்த்து உருவகமாகப் பேசினுர் வீரண்ணத்தேவர். ''இதை டில்லிபாதுஷா நாடுன்னே வை! அல்லது அவர் பிரதிநிதி ஆற்காட்டு நவாபு நாடுன்னே வை' இந்த மண்ணிலே கால் மிதிக்க, அவனுக ஒரு சட்டம் வைத்துக்கிட்டு, அவனே விசாரிச்சு, நம்ப நாட்டுப் பிரஜையை இந்தப் பரங்கிக்காரன் தூக்கிலே போடலாமா? இதைக் கேட்கிறதுக்கு நாதி இல்லையே!''

''நவாபுக்குப் பலம் இருந்தா இல்லே கேட்கிறதுக்கு?''

''ஆ'' என்று திரும்பினுர் வீரண்ணத்தேவர். ''அதைத்தான் நல்லாப் புரிஞ்சுக்கிட்டான் பரங்கிக்காரன். அதனுலே தானே எல்லா விஷயத்திலேயும் தலையிட ஆரம்பிச்சுட்டான். இப்படியே விட்டா கொஞ்ச நாளிலே நமக்கு ராஜாவா வந்துடுவான்.''

''சத்தியமா வரமாட்டான்!''

''வரமாட்டான் சொல்லாதேயும்! வரக் கூடாது! அதுக்குத்தான் நாம எல்லாரும் சபை கூடி பிரதிக்ஞை பண்ணியிருக்கோம்! இந்தா தம்பி, சிந்தும்மா சொன்னுங்க, நீயும் எங்க உடன்படிக்கையிலே சேர்ந்திருக்கிறே, என்று! நல்லது! இப்போ சொல்லு! நாட்டை முன்னுடி வைத்து எல்லாக்காரியமும் செய்வாயா?''

''செய்வேன் பெரியவரே!''

''நல்லது! இப்போ எங்க திட்டத்தைக் கேளு! முதல்லே சந்தாசாகிப்பை ஒழிக்கிறேம்! அப்புறம் அந்தப் பிரெஞ்சுக்காரன் தூபளே! அப்புறம் இங்கிலீஷ்கார குவர்னர்! இதிலே நீயும் தீவிரமாப் பங்கு எடுத்துக்க வேணும். சரியா, நான் சொல்லறது?''

''சரித்தான் பெரியவரே!''

''ரொம்ப சந்தோஷம்! இப்போ இந்த பொம்மராஜு பாளையத்திலே கூடியிருக்கிறதுக்கு காரணம் உண்டு! திருப்பதி பணத்தை எப்படியாவது நம்ம கைக்குள்ளே கொண்டு வரத்துக்குத்தான். நம்ம சாமி பணம் நமக்குத்தானே...! அன்னியனுக்குப் போகக் கூடாது!'' என்ன சொல்றே?

''உண்மைதான் பெரியவரே!''

''இந்தப் பணம் நம்ம உடன்படிக்கைக்கு ரொம்பவும் தேவையாயிருக்கிறது. எத்தனையோ காரியம் நடக்க வேண்டியிருக்கிறதில்லே? வெறும் கையிலே முழம் போட முடியுமா? நல்லவேளை! கார்வேட் ராஜாவும், நம்ம பக்கம் இருக்கிறுர், இந்தப் பணத்தின் பேரிலே யாரும் கை வைத்துவிடாமல் பார்த்துக் கொள்ளவேணும்! அதுதான் முதல் முக்கிய வேலை!''

''சரிங்க.''

''அதுக்குத்தான் சண்டை போடறேமோ தந்திரம் பண்ணறேமோ! நீயும் எங்ககூட இருக்கிறே! அதுக்கு அடுத்த வேலை சந்தா சாகிப்பை நீ கொல்லப் போகிறே! நிறைய பொறுப்பு இனிமே வந்து கொண்டே இருக்கும். தைரியமா இரு.''

மறுநாள் காலையில் ஜமீன் அரண்மனை சுறுசுறுப்பாகியது. திருமலையிலிருந்து திவான் சம்பத்ராவ் வந்திருந்தார். பல்லக்குப் பரிவாரமும் கூட வந்திருந்தன.

இருமலைக் கோவில்நிர்வாகி சீனிவாசாச்சாரியும் வந்திருந்தார்.

கார்வேட் ராஜா அவர்களை உபசாரமாக வரவேற்றுஉள்ளே அழைத்துப் போய்ச் சிரமப் பரிகாரம் செய்வித்து

''சுவாமிகளே! ஏதாவது அவசரமா?'' என்று கேட்டார்.

''ஆமாம்! மன்னர் பிரானே! கோயில் வரும்படியை யாரிடம் கொடுப்பது? எல்லோரும் தலைக்கொரு பக்கம் இருக்கிறுர்களே!'' என்றுர்கோயில் நிர்வாகி சீனிவாசாச்சாரியார்!

''ஏன்! பிரச்சினை முற்றிவிட்டதா?'' என்றுர் ராஜா.

''ஆமாம், பிரானே! இவரிடம் (சம்பத்ராவ்) கொடுக்கும்படி எனக்கு ஒரு கடிதாசி எழுதிவிட்டார்கள் இங்கிலீஷ் கம்பெனிக் காரர்கள்'' என்றுர் சீனிவாசாச்சாரி.

''தங்களுக்கா?'' என்றுர் ராஜா.

''ஆமாம்!பிரானே! தங்களுக்கு எழுதுவதுதானே முறை! தங்கள் ஊழியருக்கு எழுதுவது முறையல்லவே?'' என்று சொல்லி சீனிவாசாச்சாரி தமது மடியை அவிழ்த்துப்

---

'தோஃபா' என்ற இந்திப் படத்தில் ஸ்ரீதேவி, ஜிதேந்திரா ஆடிப் பாடும் ஒரு காட்சியில் ஏராளமான பித்தளைத் தவலைகளை வைத்திருந்தார்கள். அவைகளை வாங்குவதற்கு நாலரை லட்சம் ரூபாய் செலவாயிற்றும்! அந்தப் படத்தின் ஆரம்பத்தில் ஜெயப்பிரதா தோன்றும் ஒரு காட்சியில் ஏராளமான புடவைகள் இடம்பெற்றன. அவைகளை வாங்குவதற்கு இரண்டரை லட்சம் ஆயிற்று! ஆக இந்த இரண்டு பாடல் காட்சிகளுக்காக மொத்தம் ஏழு லட்சம் செலவு! அதாவது ஒரு நிமிஷத்துக்குச் சுமார் ஒரு லட்சம் செலவு!

- அனிதா ராமச்சந்திரன்



பத்திரமாக உறையிட்டிருந்த கடிதாசி ஒன்றை ராஜாவிடம் நீட்டினுர்.

இங்கிலீஷ் கம்பெனியார் எழுதியகடிதம் அது. சென்னைப்பட்டணத்திலிருந்து எழுதி யிருந்தார்கள். திருப்பதி வரும்படி அவ்வள வும் நவாப் முகம்மதலியைச் சேர்ந்தது! அதை வசூல் செய்யும் உரிமையை முகம்ம தலியிடமிருந்து இங்கிலீஷ் கம்பெனியார் பெற்றிருப்பதால், இந்தக் கடிதம் கண்ட தும், 'சகல பணத்தையும்' திவான் சம்பத் ராவிடம் கொடுத்து கம்பெனியாருக்கு அனுப்ப வேண்டியது.

படித்ததும் கார்வேட் ராஜாவின் புரு வங்கள் மேலே தூக்கின. ஒரு வெப்பமான மூச்சு வெளி வந்தது.

சம்பத்ராவை நோக்கித் திரும்பி, ''சம் பத்ராவ் என்ன கூறுகிறுர்?'' என்றுர் ராஜா.

''பிரானே! தங்களது மனநிலை எனக்குத் தெரியும். நாட்டு நடப்பு நன்றாக இல்லை! கோயில் வரும்படியை ஏற்கெனவே நவாபு களுக்குச் சேரும்படி கோட்டை விட்டோம்! இப்போது அவர்களைத் தாண்டி பரங்கி யருக்கே கோட்டை விடுகிறோம். இருந்தா லும் நான் என்ன செய்வேன்? கும்பெனியார் என்னைப் பணம் பெறும்படி நியமித்திருக் கிறுர்கள்! தாங்கள் என்ன சொல்கிறீர்களோ, அதையே நான் அவர்களிடம் சொல்லு வேன். தங்கள் வாக்குதான் எனக்கு முக்கி யம்! தங்களைப் புறக்கணிக்கவும் மாட் டேன்'' என்றுர் சம்பத்ராவ்!

ராஜாவின் முகம் கலங்கி இருந்தது. மேல் உத்திரியத்தை எடுத்து நீவினுர். ''ஏது? நிலைமை மோசமாகி வருகிறதே! நாளைக்கு எனக்கு மதிப்பே இல்லாது போய்விடும் போல இருக்கிறதே! சீனிவாசாச்சாரியாரே! கோயில் வரும்படி இந்தமுறை எவ்வளவு?''

''இரண்டு லட்சம் ரூபாய் பிரானே!''

ராஜாவின் புருவங்கள் மேலே உயர்ந்தன. ''அவ்வளவா?''

''ஆமாம் பிரானே! கூடிக்கொண்டே போகிறது!''

''இவ்வளவு பணம் வந்தால் யார் கண் தான் அதன் மேல் விழாது? ஏன் சுவாமிகளே! இப்போது யார் கை ஓங்கி இருக்கிறது! முகம்மதலியா.. சந்தாசாகிப்பா..?''

''நிலைமை நாளுக்குநாள் மாறி வருகிறது'' என்றுர் சம்பத்ராவ்.

சீனிவாசாச்சாரி குறுக்கே புகுந்தார்.'' தற் சமயம் முகம்மதலி திருச்சிராப்பள்ளி கோட் டைக்குள் மாட்டிக் கொண்டிருக்கிறுர். சந்தா சாகிப் தீவிரமாக முற்றுகை இட்டிருக்கிறுர்.''

''ஆனுல், சந்தாசாகிப்புக்கு எதிர்பார்த்த பிரெஞ்சு பலம் கிடைக்கவில்லை. முகம்மத லிக்கு இங்கிலீஷ் பலம் தொடர்ந்து கிடைத்து வருகிறது!'' என்றுர் சம்பத்ராவ்.

''இதனுல் நிலைமை சீக்கிரம் மாறும்!'' என்றுர் ராஜா.

''இப்போதே மாறுவதாகக் கேள்வி! சந்தா சாகிப்பு திருச்சிராப்பள்ளி கோட் டையை விட்டுத் தள்ளி காவேரிக் கரைக்குப் போய்விட்டதாகத் தகவல்! படைகளுக்குச் சம்பளம் கொடுக்கவில்லையாம்! முற்றுகை போட அவர்கள் மறுக்கிறுர்களாம்!''

''சம்பளம் கொடுக்கவில்லையா? அதனுல் தான் திருப்பதிப் பணத்தைக் கேட்கிறுரா?''

''ஆமாம். அவருக்கும் பணக்கஷ்டம்,முகம் மதலிக்கும் பணக்கஷ்டம்!''

''சரிதான்! பணக்கஷ்டத்தோடு சண் டையா? ஏன் இருவருக்கும் பிரஞ்சுக்காரரும் இங்கிலீஷ்காரரும் கொடுத்து உதவட் டுமே!'' என்றுர் ராஜா.

''அவர்கள் என்ன வாழ்கிறுர்கள்! அவர் களும் பணத்துக்குக் கஷ்டப்படுகிறுர்கள்! இல்லாவிட்டால் திருப்பதி உண்டிக்காகக் காத்திருப்பார்களா?''

''இதனுல்தான்!'' என்று சீனிவாசாச்சாரி, இடைபுகுந்தார்... ''இந்த நவாபு பூசல் களில் யாராவது ஜெயித்து வரட்டும்! அப்புறம் பணத்தை எங்கே கொடுப்பது என்று யோசிக்கலாம்!'' என்றுர்.

''அதற்கு இடம் கொடுக்கமாட்டேன் என்கிறுர்களே! எல்லோரும் நம்மைப் போட் டுப் பிடுங்குகிறுர்களே'' என்றுர் ராஜா.

மற்றவர்கள் பேசவில்லை.ராஜா முகவாயில் கைவைத்து யோசித்தார்.

சிறிது நேரத்தில் தீர்மானமானதுபோல் திரும்பி, ''யாருக்குமே கொடுக்க வேண் டாம். வசூலாகவில்லை என்று சொல்லிவிடு வோம்'' என்றுர் ராஜா.

''ஒத்துக் கொள்வார்களா? நஞ்சை புஞ்சை குத்தகைப் பணம் வரவில்லை என்று சொல்லலாம்! உண்டிப்பணம் என்னஆயிற்று என்று கேட்பார்களே?''

ராஜா விழிக்க, திடீரென்று வெளியே ஏற் பட்ட இரைச்சல் அவர்கள் கவனத்தைக் கவர்ந்தது.

(தொடரும்)

---

தெற்கு பம்பாய் பார்லிமெண்ட் தொகுதியில்; சுனில் கவாஸ்கரை இந்திராகாங்கிரஸ் சார்பாக நிறுத்த இந்திரா காங்கிரஸ் முயற்சி செய்தது. ஆனுல் கவாஸ்கர் மறுத்து விட்டார்..! இதே பார்லிமெண்ட் தொகுதியில் அருண் ஷோரியை சுயேச்சை வேட் பாளராக நிறுத்த எதிர்க்கட்சிகள் முயற்சி செய்தன. அருண் ஷோரியும் மறுத்து விட்டார்.

ஆதாரம்: ஸண்டே அப்சர்வர்.

—ராஜேஸ்வரி.



## வெள்ளித்திரை



# உங்கள் வீட்டுப் பிள்ளை

பிரபு இன்ஸ்பெக்டராம். ஜெயிலில் வந்து சிக்குகிறார், நகைக் கேஸைத் துப்பறிவதற்காக! சிவச்சந்திரனிடம் ரேடியோ டிராமா மாதிரி வசனம் பேசி, இரண்டு செகண்டுக்கு ஒரு தரம் தோளில் தட்டி... சிரிப்புத் தான் வருகிறது.

இத்தனையும் பண்ணிவிட்டு பெயர்காட்டு வதற்கு முன்னால் பிரபுவை நெற்றியில் சுடுகிறார்கள். எதற்காம்? இன்னொரு அம்னீஷியா படத்தைத் திரையில் காட்டத்தான்.

எந்த ஊரில் சார் சாருஹாசன் மாதிரி ஒரு டாக்டர் இருக்கிறார். மனிதருக்கு ஹீரோ பிரபு மேல் என்ன ஒரு அபிமானம்! கிராமத்தில் தொண்டு செய்து வாழ்நாளில் சேகரித்த அத்தனை பணத்தையும் (ஐயாயிரம்) தன் பூர்வீகத்தைத்தேடப் போகும் பிரபுவுக்குச் செலவுக்கு என்று கொடுக்கிறாரே!

பூர்ணிமா ஜெயராம், பூர்ணிமா பாக்யராஜ் ஆவதற்கு முன் நடித்த படமாம். நடிக்க வேண்டிய ஸீன்களில் எல்லாம் கல்யாணக் கனவுகளாகக் கண்டு கொண்டிருந்தாரோ என்னவோ?

பிரபு வீட்டில் ஒரு நடமாடும் நடிப்புப் பல்கலைக் கழகத்தை வைத்துக் கொண்டு, அரிச்சுவடி வகுப்பு கூடத்தாண்ட முடியாமல் திணறுகிறார்.

ஒய். ஜீ. மகேந்திரனின் அந்த 'அண்டர் செக்ரட்டரி' வசனம் மட்டும் இயல்பான சிரிப்பை வரவழைக்கிறது.

சூயிங்கம் மெல்லும் விஜயகுமார் பரவாயில்லை. வனிதா, சத்யராஜ் எல்லாம் ஒப்புக்குச் சப்பாணிகள்.

சொல்லாமல் விடுவது உத்தமம் என்பதால் இசையமைத்திருக்கும் சங்கர்—கணேஷ் பற்றி எதுவும் சொல்லாமல் விடப்படுகிறது.

கதை என்னவென்றால், ஒரு போலீஸ் இன்ஸ்பெக்டர், நகைத் திருட்டைக் கண்டு பிடிக்க சென்னைக்கு வருகிறார். அவர்தான் பிரபு. சுந்தரராஜன் தான் பிரபுவின் அப்பா. இல்லை டெல்லி கணேஷ் தான் அப்பா. ஆனால் அம்மா என்னவோ சுமித்ரா தான். நிஜ அம்மாவும் நிஜ அப்பாவும் பிரபுதான் பையன் என்று தெரியாமல் அவனை சவசவ விஜயகுமார் வில்லனிடம் மாட்டிவிடுகிறார்கள். சாருஹாசன் பெண் பூர்ணிமா. பூர்ணிமாவின் அம்மா வடிவுக்கரசி. ஏதோ ஒரு இனம் புரியா காரணத்தால் பிரிந்த (எதற்குப் பிரிந்தார்கள் என்று கணவனுக்கும், மனைவிக்கும் சரியாகவே தெரியவில்லை.) சாருஹாசனும், வடிவுக்கரசியும் க்ளைமாக்ஸில் இணைகிறார்கள். பிரபு மூன்று ரீல்களுக்கு அடி உதை படாமல் சண்டை போடுகிறார். இவன் உங்க வீட்டுப் பிள்ளை என்று சுந்தரராஜனிடம் சொல்லப்படுகிறது. இல்லை உங்க வீட்டுப் பிள்ளை என்று டெல்லி கணேஷிடம் சொல்லப்படுகிறது. இல்லை உங்க வீட்டுப் பிள்ளை என்று ரசிகர்கள் பக்கம் கையைக் காட்டி...

ஐயோ ஐயோ வேண்டாங்க, கல்லால அடிச்சாதீங்க, கதையைச் சொல்லலீங்க, நிறுத்திடறேங்க.

ஐயா, டைரக்டர் வி. வி. ராஜேந்திரன் சார், நீங்கள் பேசாமல் பழையபடி நல்ல ஹிந்திப் படங்களை (மற்ற டைரக்டர்கள் இயக்கியது.) தமிழாக்கம் பண்ணிக்கொண்டிருக்கலாம்.

---

நோயாளி: மார்பு 'படபட'ன்னு அடிச்சதுக்கு மருந்து கொடுத்தீங்க, அதைச் சாப்பிட்டதும் என்ன அதிசயம், அப்படியே நிலைமை தலை கீழா மாறிப் போச்சு!.

டாக்டர்: அப்படியா? குணமாயிடுச்சா?

நோயாளி: இல்லே டாக்டர்! படபடன்னு அடிக்கிறதுக்குப் பதிலா இப்போ 'டபடப'ன்னு அடிக்கிறது!

ஆர். எஸ். சுப்பிரமணியன்



# புயல் கடந்த பூமி

விமர்சனம் என்று எதற்கு?

மேலே உள்ள கார்ட்டூனே போதுமே! —ஜெயமன்மதன்






இந்திராகாந்தி மறைவு குறித்து: இரங்கல் கூட்டம் ஒன்றை டெல்லியில், சமீபத்தில் ஒருவர் கூட்டினார். தம் கைப்படவே அழைப்பிதழ் எழுதி மந்திரிகள் உள்பட எல்லோருக்கும் அனுப்பி வைத்தார். ஆனால் ஒரு மத்திய மந்திரி கூட அந்த இரங்கல் கூட்டத்தில் கலந்து கொள்ளவில்லை... காரணம் அந்த இரங்கல் கூட்டத்தை நடத்தியவர் மேனகாகாந்தி...!

ஆதாரம்: ஸண்டே அப்சர்வர்.

—ராஜேஸ்வரி.

● ''ஒரு காலத்தில் சினிமாக்காரர்கள் ஆட்சி என்று தி.மு.க.வை ஏளனம் செய்த கட்சியான காங்கிரஸ் இன்று சினிமா நட்சத்திரங்களே கதியென்று அடிமையாகக்கிடக்கிறது'' என்பதை எந்த முகூர்த்தத்தில் எழுதினீர்களோ, தெரியவில்லை. ஆந்திராவில் நடிகர் கிருஷ்ணாவும் — நடிகை விஜயநிர்மலாவும் காங்கிரஸில்சேர்ந்துவிட்ட செய்தி வந்துவிட்டது. போகிற போக்கைப் பார்த்தால் காங்கிரசில் சேர வேண்டு மென்றால் குறைந்தது ஒரு படத்திலேயாவது தலையையாவது நீட்டியிருக்க வேண்டும் என்று சொன்னாலும் சொல்லுவார்கள். தியாகத்துக்கும், சேவைக்கும் முதலிடம் கொடுத்து வந்த காங்கிரஸ் நடிப்புக்கு முதலிடம் கொடுத்து வருகிறது.

சென்னை 57 இரணியல் 'கலை'

● 18.11.84. கல்கியின் வட்டமேஜை பகுதியில் சிறுவன் ரவிசங்கரின் சிறு நீரக மாற்று அறுவைச் சிகிச்சைக்குப் பொருளுதவி கோரி இடம் பெற்ற வி.கிருஷ்ணமூர்த்தியின் கடிதம் கண்டேன். ''குட் ஸமாரிடன்ஸ்'' என்ற எங்களின் நற்பணி மன்றம் சார்பாக ரூ 504 சேகரித்து வேலூர் டாக்டர் ஜேகப்புக்கு அனுப்பியுள்ளேன். சிறுவன் ரவி சங்கர் பூரண குணமடைய டில்லி கணேஷ்ஜி மந்திரில் பிரார்த்தித்துப்பிரசாதம் அனுப்பியுள்ளேன்.

புது டில்லி. ஏ. வி. ராமமூர்த்தி

(இது போன்று நிறையப் பேர் பணம் அனுப்பியுள்ளதாக நன்றியுடன் எழுதுகிறார் கிருஷ்ணமூர்த்தி. -ஆர்)

● ஜே. எஸ். ராகவனின் 'அபிநயக் கச்சேரியைப் பெரிதும் ரசித்தேன். சுவைகளிலேயே நகை போன்றது நகைச்சுவை என்று எண்ண வைக்குமளவுக்கு மிக நயமாக எழுதியிருந்தார். படிக்கவும் ரசிக்கவும் சுகமாயிருந்தது. உமாபதியின் ஓவியம் அற்புதம்!

சென்னை-10 ஜெயரதன்.

## வட்டமேஜை



● 9.12.84இதழில் சிவகாசி தவிர வேறு எங்கும் வேலைக்கு ஆட்கள் தேவை என்ற பலகை இந்தியாவிலேயே கிடையாது என்பதாக ஒரு துணுக்கு வெளியாகியுள்ளது. இது தவறு. எங்களது திருப்பூர் நகரில் சுமார் 1200 பனியன் தொழிற்சாலைகள் உள்ளன. நகரின் ஒவ்வொரு தெருவிலும் வேலைக்கு ஆட்கள் தேவை என்ற போர்டு தொங்கிக் கொண்டே இருக்கிறது.

திருப்பூர் அஸ்மத்துல்லா

● சுஜாதாவின் 'எழுதுகிறவனுக்குக் கவனம் முக்கியம்' கட்டுரையில் அவர் முத்திரை எழுத்து பரிணமிக்கிறது.

நல்லாலம் ஆர். பிரகாசம்

● ஆனந்தி எழுதிய ''திரிமூர்த்திகள்—பிறந்த திருவாரூர்'' படித்தேன். மும்மூர்த்திகள் பிறந்த ஊர் என்று சொல்லிக் கொள்ளும் போது எங்களுக்குப் பெருமையாகவே இருக்கிறது. ஆனாலும் அவர்கள் வாழ்ந்த இல்லங்கள் பாழ்பட்டு இருப்பதை தினமும் பார்க்கையில் மனசு கனத்துப் போகிறது.

திருவாரூர். பாஸ்கரன்.




● தலைசிறந்த 'வயலின் வில்லாளி' லால்குடி ஜெயராமனின் படத்தை 'கல்கி' அட்டையில் போட்டு என் போன்ற அவர் ரசிகர்களை மகிழ்ச்சிக் கடலில் தள்ளிவிட்டீர்கள்.

ஸ்ரீரங்கம் ஆர். கோபாலன்.

● வீணை வித்துவான் மைசூர் வி. துரைசாமி ஐயங்கார் அவர்கள் தமது 15வது வயதிலேயே ஆஸ்தான வித்துவான்ஆன பெருமை கொண்டவர் என்ற செய்தி கலைக்கு மரியாதை செய்வதில் வயது எதுவும் குறுக்கே நிற்கக் கூடாது என்ற முதல்வரின் முத்தான கருத்தை சத்தான விதத்தில்மெய்ப்பிப்பதைக் காணமுடிகிறதன்றோ!

சென்னை வி. ச. வாசுதேவன்

● சென்ற வாரம் நான் திருவண்ணாமலையிலிருந்து வேலூருக்குப் பயணம் செய்த போது வழியில் ஓர் ஊரில் பிரபலமான கட்சி ஒன்று நூதன முறையில் தேர்தல் பிரசாரத்தில் ஈடுபட்டிருந்தது. சுமார் 6 முதல் 9 வயதிற்குள்ளான சிறு பிள்ளைகள் வரிசையாக நின்று கட்சிக் கொடியைக் கையில் பிடித்து கட்சி கோஷங்களை எழுப்பிக் கொண்டு சென்றனர். இளம்பிராயத்தில் பள்ளிக்குப்பாட புத்தகங்களை சுமக்க வேண்டிய சிறுவர்கள் கட்சிக்கொடியைத் தூக்குகிறார்கள். எப்படி நம் நாடு முன்னேறும்? இளம் சிறார்களை இப்படி தவறான வழியில் பயன்படுத்தலாமா?

காஞ்சி க. கௌசிகன்

(கடைசிக் கடிதம் பரிசு பெறுகிறது)

# நரசுஸ் காபி
## அருந்துங்கள்!
## நல்ல வெகுமதிகளை அடையுங்கள்!






- **30 கிலோ** நரசுஸ் காபிக்கு
  எவர்சில்வர் சாப்பாடு தட்டு.
- **10 கிலோ** நரசுஸ் காபிக்கு
  எவர்சில்வர் காபி டபரா செட்.
- **5 கிலோ** நரசுஸ் காபிக்கு
  எவர்சில்வர் காபி டம்ளர்.
- **2 கிலோ** நரசுஸ் காபிக்கு
  பல வண்ணத் துணிப்பை.
- **500 கிராம்** நரசுஸ் காபிக்கு
  எவர்சில்வர் ஸ்பூன்.
- **250 கிராம்** நரசுஸ் காபிக்கு
  பிரிமியர் பிஸ்கட் பாக்கெட்.
  (பிரிமியர் பிஸ்கட் எங்கள்
  சார்பு நிறுவனத்தின் தயாரிப்பே!)







மொத்தமாகவோ, சில்லரையாகவோ, வாங்கும் நரசுஸ் காபியுடன் கிடைக்கும் வெகுமதிக் கூப்பன்களைப் பெற்று, வெகுமதிகளைப் பெறுங்கள்.

31.12.84 முதல் 2.2.85 முடியும் விற்பனைக்கே வெகுமதிகள் உரியவை.

* சேலம் எவர்சில்வர் தகட்டால் தயாரிக்கப்பட்ட எவர்சில்வர் பாத்திரங்கள்.

ஜீவனுள்ள ஒரே காபி!

# நரசுஸ் காபி






**நரசுஸ்**
**காபி கம்பெனி**
சேலம் 636 007
கிளைகள்: தமிழ்நாடெங்கும்

ADWAVE/NCC 2796

# நிலவே நீயும் விலகாதே!

சுபா

"**எ**த்தனை நாள் லீவு போடப் போறீங்க பாலா?"

"இருபது நாளுக்கு எழுதிக் குடுத்திருக்கேன் அனு..." என்றான் பாலா அனுசூயாவின் அண்மையை ரசித்துக் கொண்டே. இடது உள்ளங்கை அவள் இடுப்பில் திருட்டுத்தனமாய்ப் பதிந்து அந்த இதமான சூட்டை அனுபவித்துக் கொண்டிருந்தது. காற்றில் சிலுப்பிவிடப் பட்ட அவளுடைய முடிக்கற்றை அவன் முகத்தில் படர்ந்து லேசாய்க் குறுகுறுப்பை ஏற்படுத்தியது. பஸ் இன்னும் வேகம் பிடித்தது.

"இருபது நாள் எதுக்காம்?"

"ஒரு வாரம் கோயில் கொளம்னு ஹனிமூன்... அப்புறம் ஒனக்குச் சமையல் கத்துக் கொடுக்க... எங்க வீட்டு டேஸ்ட்டையும், என் பர்ஸனல் டேஸ்ட்டையும் தெரிஞ்சிக்க வேணும்?"

"கிச்சு கிச்சு மூட்டற மாதிரி இருக்குது.. இடுப்புலேர்ந்து கையை எடுங்க... ஒங்க அப்பா எப்படி பாலா? சாப்பாட்டு விஷயத்தில ரொம்ப டேஸ்ட்டு பார்ப்பாரா?"

"அப்பா அந்த விஷயத்தில பசுமாடு மாதிரி... சுத்தமா உப்பே போடலேன்னுக் கூட வாயைத் தொறக்காம சாப்பிட்டு எழுந்துடுவாரு."

"அப்பா தப்பிச்சேன்... கொஞ்சம் முன்னே பின்னே இருந்தாச் சமாளிச்சிக்கலாம்..."

"அதான் நடக்காது... சின்னது இருக்குதே ராதா... அதுக்கு நாக்கு பல்லி மாதிரி நீளம்... தண்ணியைக் கூடச் சப்புக் கொட்டித்தான் சாப்புடும்... தப்பாச் சமைச்சியோ ஒன்னைப் பொரட்டி எடுத்துடும்."

"இன்னும் எவ்வளவு தூரம் பாலா?"

"ப்ரிண்டிங் ப்ரஸ்ஸா? நாலு ஸ்டாப்பிங் போகணும்... உன்னை எதுக்குக் கூப்பிட்டேன்னு மாடலைப் பார்த்து நீ சரின்னு சொல்லிட்டா அடிச்சி வாங்கிட்டு வரது எம் பொறுப்பு."

"பாத்த ஒடனே பளிச்னு கண்ணை அள்ளற மாதிரி ஒரு மாடல் பொறுக்கலாம்... எத்தினி நாள்ல தருவான்?"

"மிஞ்சி மிஞ்சிப் போனா ரெண்டு நாளு... இன்னிக்குச் செவ்வாயில்ல...? வியாழக்கெழமை சாயங்காலம் நான் வீட்டுக்கு எடுத்துட்டு வரேனே..."

**அ**டுத்த புதன்கிழமை பகலில் அனுசூயாவின் வீட்டில் ஒரு புதுக் குழப்பம் கேட்டைத் திறந்து கொண்டு நுழைந்தது.

"வாங்க தரகரய்யா..." என்று கௌரி வாசல் கதவைத் திறந்து விட்டாள். "அவரு வெளியில போயிருக்காரே... பெரிசுக்குத் தான் எதுவும் சரிப்பட்டு வரலே... ரெண்டாவதுக்காவது நீங்க கொண்டு வர மாப்பிள்ளே அமையுதான்னு பார்ப்போம்."

தரகர் ஜிப்பாவின் கைகளை மடித்து விட்டுக் கொண்டார். வெற்றிலைக் காவி படிந்த பற்களைக் கொஞ்சம் காட்டினார்.

"இந்தப் பொன்னுசாமி கைவச்சி இதுவரைக்கும் நடக்காத கல்யாணமே இல்லம்மா... ஒங்க வீட்ல மட்டும் அந்தக் கெட்ட பெயரை வாங்கிடுவேனா? இப்ப நான் வந்ததே அனுசூயா பாப்பாவுக்குத்தான்... ஒரு நல்ல ஜாதகம் கொண்டாந்திருக்கேம்மா..."

கௌரி திடுக்கிட்டாள்...

"இனிமே அவசியமில்லே தரகரய்யா... அதுக்கு அதும் இஷ்டப் படியே ஒரு பையன் கெடைச்சிட்டான்... வேத்து ஜாதிப் பையனாயிருந்தாலும் பார்த்தா நல்ல மாதிரியாத் தெரியறான்."

இந்த முறை தரகர் திடுக்கிட்டார்.

"வேற ஜாதியா ... ஏம்மா... என்னம்மா அப்படி அவசரம்?"

"நீங்க கொண்டு வர பையன் எதுவும் சரிப்பட்டு வரல்லியே..."

"ஒண்ணு ரெண்டு அப்படித்தான் தட்டிப் போவும்... இப்ப ஒரு பிரமாதமான ஜாதகம் கொண்டு வந்திருக்கேம்மா..."

"ஜாதகம் நல்லாயிருந்து என்ன? பையனுங்க புத்தி இல்ல கோணிக்குது?"

"இந்தப் பையன் அப்படி இல்லம்மா... தங்கமான பையன்... ராவ் பகதூர் ரத்னசாமி குடும்பத்தில வரவங்க... பையன் டாக்டர்... கவர்ன்மெண்ட் ஆஸ்பத்திரில வேலை... அதில்லாம தனியா ஒரு பாலி க்ளினிக் வேற வெச்சி நடத்தறான். பெரிய எடம்... முப்பத்தியொரு வயசுதான் ஆவுது... ராஜான்னு ராஜாதான் பையன்... எல்லா வெவரமும் சொல்லிட்டேன். 'ப்பூ சின்ன விஷயம், இதெல்லாம் பெரிசு பண்ணுவாங்களான்னு சொல்லிட்டான். பாப்பா போட்டோவைக் காமிச்சேன்... அசந்து போய்ட்டான்... புடிச்சிப் போச்சி... சந்தோஷமா ஓடி வரேன்... இப்படி ஒரு குண்டைத் தூக்கிப் போடறீங்களே?"

கௌரி நாற்காலியில் மெல்ல உட்கார்ந்து கொண்டாள். நல்ல வேளையாய் அனுசூயா வீட்டில் இல்லே. ரவிக்கை தைக்கக் கொடுக்கப் போயிருந்தாள்.

''நெஜமாகத்தான் சொல்றீங்களா?''

''ஆமாம்மா,... எதுக்குப் பொய் சொல் றது?'' என்று கௌரியையே திருப்பிக் கேட்டார்.

கௌரி உதடுகளை ஈரப்படுத்திக் கொண் டாள்.

''நல்லவேளை, இன்னும் நிச்சயதார்த்தம் அது இதுன்னு எதுவும் செய்ஞ்சிடலே...'' என்றாள். சுற்றுமுற்றும் பார்த்தாள். கஸ்தூரி கூடக் கல்லூரிக்குக் கிளம்பிப் போயிருந்தது.

''பையனோட ஃபோட்டோ கொண்டு வந்திருக்கீங்களா தரகரய்யா?''

லேசாக வாயைக் குவித்துச் சீட்டி ஒலி மாதிரி ஒரு சப்தத்தை ஏற்படுத்திக் கொண்டே நுழைந்தாள் கதம்பா. கஸ்தூரி வீட்டின் ஒரு மூலையில் உட்கார்ந்து பூத் தொடுத்துக் கொண்டிருந்தாள்.

வீரராகவன் சோஃபாவில் உட்கார்ந்திருந் தார். போட்டிருந்த கண்ணாடியை எடுத்துத் துடைத்து மறுபடியும் போட் டுக் கொண்டார்.

''வாம்மா கதம்பா'' என்றார் வாஞ்சையுடன், "ஏன்லேட்டு?'' என்று மென்மையாய்க் கேட் டார். வாய் மட்டும் அப்படிக் கேட்டதே தவிர கண் உள் ளங்கையில் வைத்திருந்த ஒரு ஃபோட்டோவைப்பரிசீலித்துக் கொண்டிருந்தது.

''இன்னிக்கு ஆஃபீஸ்ல ஒரு சின்ன அசம்பாவிதம் நடந்து போயிடிச்சிப்பா'' என்றாள் கதம்பா.

''என்ன ஆச்சும்மா?'' என்றார் அவளை நிமிர்ந்து பார்த்து.

''ரகுபதி ரகுபதின்னு ஒரு பையன்ப்பா... அவனுக்குப் புத்தி கொஞ்சம் பிசகிடுச்சிப் போல இருக்குப்பா...ரொம்ப நல்ல பையன்னு நெனைச்சிட் டிருந்தேன்... ரொம்ப சகஜ மாப் பழகுவான்... எங்கூட கதைல்லாம் பேசுவான்... நானும் யதார்த்தமாப் பழகிக் கிட்டிருந்தேன்... இன்னிக்கு காப்பி சாப்பிடப் போலா மான்னு கூப்பிட்டான்..., போனேன்...என்னதோணிச்சி அவனுக்குன்னு தெரியலே... திமர்னு என் கையைப் புடிச்சி, 'ஒன்னை நான் லவ்பண்றேன்... நீ இல்லேன்னு என்னால இருக்க முடியாதுன்னு' ஒளறினான்... சினிமால்லாம் நெறையப் பாக் காத ரகுபதி... கதைல எழு தறதெல்லாம் நெஜத்தில நடக்காதுன்னு சொன்னாக் கூட கையை வுட மாட்டேங் கறான்... சுத்தி வர நாலஞ்சி பேர் இதைப் பெரிய ஷூட்டிங்கா நெனைச்சிட்டுப் பாக்க ஆரம்பிச்சிட்டாங்க... பளார்னு ஒரு அறை வுட்டேன்... அப்புறந்தான் அவ னுக்குப் பைத்தியம் தெளிஞ்ச மாதிரி அந்தப் பக்கம் நவுந்தான்... கை எனக்கு இன்னும் எரியுது. அவனுக்கு எப்படி இருக்கும்? பாவம் இல்லே.''



''பாவமாவது, புண்ணியமாவது, நல்ல வேலே செஞ்சேம்மா... நீ...'' என்று சொல்லிவிட்டுத் தூரோம் நின்றிருந்த அனுசூயா பக்கம் பார்வையை ஓட்டினர். அனுசூயாவின் அகலமான கண்களில் இருந்து வழிந்த கண்ணீர் கன்னத்தில் — உப்புக் கோடாய்க் காய்ந்திருந்தது. சூழ்நிலே வித்தியாசம் அப்போதுதான் கதம்பாவுக்கு உறைத்தது.

வீரராகவன் மறுபடி அந்த உள்ளங்கை ஃபோட்டோவில் கவனத்தைப் பதித்தார். தலையை முன்னுக்கும் பின்னுக்கும் அசைத்து ஊன்றிப் பார்த்தார்.

''வெரி நைஸ் பாய்'' என்ருர்.

அனுசூயா அத்தனேக்கும் ஒரு வார்த்தை பேசவில்லே.

''அனுசூயா.''

கௌரி நெஞ்சில் லேசான சலனத்துடன் அனுசூயாவை நிமிர்ந்து பார்த்தாள். வீரராகவன் குரலுக்கு ஒரு தலேயாட்டல் கூட இருக்கவில்லே.

''அம்மா அனுசூயா ஒன்னேத்தாம்மா..'' என்ருர் கொஞ்சம் அழுத்தமாய். ''டாக்டர் கணேசன். எம். பி. பி. எஸ். எம். எஸ். கவர்ன்மெண்ட் டாக்டர். அதில்லாம மாம்பலத்தில ஒரு பாலி க்ளினிக்வச்சிருக்காம்மா. என்னுக் கூட்டங்கறே... நேத்து சாயங்காலம் நான் அங்கதான் போயிருந்தேன். க்ளினிக் காம்பவுண்ட்ல காரும் ஸ்கூட்டரும் நிக்க வைக்கறதுக்கு எடம் பத்தாம ரோட்ல நிறுத்தருங்கன்னு பாத்துக்கயேன்.''

''என் ஹார்ட் ட்ரபிளுக்கு அவரைப் போய் கன்ஸல்ட் பண்ணலான்னு சொல்றீங்களாப்பா...?''

''வெளேயாடறியா அனுசூயா?'' இந்த முறை வீரராகவனின் குரலில் முன்பிருந்த குழைவு இல்லே. ''எல்லாம் ஒன் நல்லதுக்குத் தானம்மா? நீ நல்லா இருக்கணும்னு தானம்மா இதெல்லாம் செய்ருேம். இவ்வளவு கஷ்டப்படருேம். சும்மாவாம்மா கல்யாணம் நடக்கப் போவுது. கல் அட்டிகை. வைரத் தோடு. வைர மூக்குத்தி. அதில்லாம பம்பாய் வளேயல். மாட்டல். கொலுசு. இத்தனேயும் பூட்டிவிட்டுச் சீர் செனத்தியோட அனுப்பி வைக்கருேம்மா. நம்ப ஜனங்களுக்கு மூனு வேளே வயிருர வடை பாயசத்தோட விருந்து ஜமாய்க்கப் போருேம்மா. நீ என்னவோ நான் ஒண்ணு சொன்னு, நீ ஒண்ணு சொல்றியே?''

''இந்த அனுசூயா உங்க பேச்சை மீறிக்கிட்டு ஏதாவது செய்ஞ்சிருக்காளாப்பா?''

''அதானே பார்த்தேன்...'' என்ருர் வீரராகவன் நிமிர்ந்து உட்கார்ந்து. முகத்தில் சட்டென்று பெருமை பிடிபடாமல் நிரம்பிப் போயிற்று. ''ஏய் கௌரி, பாத்துக்கிட்டியா... என்ன இருந்தாலும் எம்பொண்ணு எம் பொண்ணுதாண்டி!''

''அதுக்காக நீங்க செய்யறது எவ்வளவு தூரம் நியாயம்பா? எனக்கு மனசுன்னு ஒண்ணு இருக்கறதையே, மறந்துட்டீங்களா?''

''என்ன சொல்ற நீ?''

''வேற யாரோ ஒரு குருமூர்த்திக்கோ, இருமூர்த்திக்கோ முன்னுல நான் சரின்னு சொல்லலே...? அந்தப் பையன் நீ வியாதிக்காரி வேணும்டின்னு போயிடலே ..? அப்புறம் என்னே இந்தப் பாலாவுக்குக் கட்டிக் குடுக்கறதுக்கு ஒத்துக்கலே? இப்ப மறுபடியும் வேற ஒருத்தனுக்குக் கழுத்தை நீட்டுன்னு சொன்னு நான் என்ன மாடாப்பா? சண்டவல்லாம் வந்து என்னேக் கயிறு கட்டிக் கூட்டிட்டுப் போறதுக்கு?''

''அனுசூயா, என்னு பேசு பேசற துன்னே இல்லாமப் பேசறே. நீ ஒருத்தி தான் ஊட்லன்னு நீ சொல்ற பேச்சு சரி தான்... இல்லன்னு சொல்லலே... பின்னடி ரெண்டு நிக்குதுங்களே... பொண்ணு பாக்க றதுதான்... வேணும்னு சொல்றதுதான்.. அதெல்லாம் சகஜம்மா... ஒருத்தன் கண்ணுக்கு நீ வேணும்னு பட்டே சரி... இந்தப் பையன் சரின்னு சொல்லிட்டலே... பையனும் பாக்கறதுக்கு ராஜாவாட்டம் இருக்கான்.. நீ சொன்னியே, பாலாவோ, தோலாவோ அவனே எடுத்துக்கோ... பாங்க்ல ளார்க்கு. இன்னிக்கெல்லாம் பார்த்தா ஆயிரம் ரூபா சம்பளம் வாங்குவானு? அதை வெச்சிக்னு குடித்தனம் பண்ணுன்னு அஞ்சாந்தேதியே சம்பளத்தைத் தொலேச்சிட்டு அப்புறம் மாசமூச்சூடும் என்னு பண்றதுன்னு சொறிஞ்சிக்னு நிப்பான்... பெரியவங்கன்னு எல்லாத்தையும் யோசனே பண்ணும இருக்க மாட்டோம்மா.''

அனுசூயா பதில் சொல்லாமல் அம்மாவைப் பார்த்தாள். கௌரி அவளேப் பார்த்தும் பார்க்காத மாதிரி வேறு ஏதோ யோசனேயாக இருப்பவள் போலத் தெரிந்தாள்.

வீரராகவன் மறுபடியும் ஃபோட்டோவை உள்ளங்கையில் வைத்துக் கொண்டு ''நைஸ் பாய்'' என்ருர்.

''இன்னுங் கொஞ்ச நேரத்தில பாலா கைல இன்விடேஷனுேட வரேன்னு சொல்லியிருக்காருப்பா'' என்ருள் அனுசூயா நம்பிக்கையைச் சாகடிக்க விடாமல்.

''வரட்டும்மா... நான் பார்த்துக்கறேன்...'' என்ருர் வீரராகவன் குரலில் எகத்தாளத்தைத் இணித்துக் கொண்டு.

**பா**லா ஒரு துள்ளலுடன் பச்சைக் கம்பிக் கதவின் முன்னுல் நின்ருன். வாசல் எப்போதும் போல மூடியிருந்தது. அழைப்புக் குமிழை அழுத்திஞன். கதவு திறந்ததும் வீரராகவன் எதிர்ப்பட்டார்.

'' வாங்க தம்பி'' என்ருர் வீரராகவன். ''தம்பி இன்விடேஷன்லாம் ஏற்பாடு பண்ணிட்ட மாதிரி தெரியுது'' என்ருர்.

பாலா பரபரவென்று கையில் வைத்திருந்த பார்சலில் இருந்து வெளிப்புறமாய்ச் செருகியிருந்த மாதிரி அழைப்பிதழை எடுத்துக் கொடுத்தான்.

''நல்லா வந்திருக்குது'' என்ருர் வீரராகவன், ''எவ்வளவு ஆச்சிங்க?'' என்ருர்.

''முந்நூறு ரூபா ஆயிருக்குதுங்க...''

''ரொம்பக் குறைச்சலா இருக்குதே...'' என்ருர்.

''பிரெஸ்காரன் நம்ப ஃபிரெண்ட்... அதனுலதான்...''

''அந்தப் பார்சலே அப்படியே குடுங்க தம்பி... ''அப்புறம் வேற ஏதாவது செலவு செய்ஞ்சிருக்கீங்களா?''

''எதுக்குங்க அந்தக் கணக்கெல்லாம்?'' என்று கேட்டான் பாலா.

''மொத்தமா ஐநூறு ஆயிருக்குமா?''

''அது எவ்வளவோ ஆயிட்டுப் போவுதுங்க... என்ன வந்ததிலேர்ந்து செலவுக் கணக்கையே கேட்டுக்கிட்டு இருக்கீங்க? அனுசூயா இல்லே, அம்மா இல்லே...?'' என்று படபடப்பாய்க் கேட்டான். உதவிக்கு யாராவது பக்கத்தில் இருந்தால் ஆறுதலாய் இருக்கும் போலிருந்தது.

''எங்களை மன்னிச்சிட்டேன்னு ஒரு வார்த்தை சொல்லுங்க தம்பி'' என்றார் வீரராகவன் திடீரென்று பல்லியடிக்கிற மாதிரி. ''நேத்துத்தான் திடீர்னு அது நடந்தது தம்பி. எங்க ஜாதியிலயே ஒரு டாக்டர் பையன் அனுசூயாவைக் கட்டிக்கறேன்னு சொல்லிட்டான். அப்படி, இப்படின்னு அல்லாட வெச்சிட்டு மேல்மருவத்தூர்க்காரி எங்களுக்கு ஒரு நல்ல எடத்தைக் காமிச்சிக் கொடுத்துட்டா... சௌரி... தம்பிக்கு சூடா ஒரு காப்பி போட்டு எடுத்துட்டு வா... அப்படியே பீரோ சாவியையும் கொண்டா...''

பாலா விட்டத்தை வெறித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான். நிஜமாகவே இது அவன் வாழ்க்கையில் தான் நடக்கிறதா என்ற சந்தேகம் உடல் முழுவதும் பரவியிருந்தது. இதயத்தில் இருந்து எல்லா இடங்களிலும் வியர்த்து விட்டது. சௌரி கொண்டு வந்து வைத்த காஃபி, கொத்துச் சாவி எதுவும் அவனுக்குப் புலப்படவில்லை.

பாலா அதிர்ந்து போயிருந்தான். கால் தொய்ந்து அவனிடமிருந்து பிய்த்துக் கொண்டு போன மாதிரி இருந்தது.

''நீங்க என்கிட்ட சரின்னு சொன்னது?'' என்று நா உலரக் கேட்டான்.

''நீங்களே யோசிச்சுப் பாருங்க தம்பி. எங்க ஜாதிக்காரங்க இந்தச் சமுதாய முன்னேற்றம், கலப்புத் திருமணம் அதில, இதில எல்லாம் நம்பிக்கையில்லாதவங்க. இப்ப நான் வந்த பையனை வுட்டுட்டு உங்களுக்கு ஏற்பாடு பண்றேன்னு வச்சிக்குங்க... ஒருத்தன் கூட எங்க வீட்ல கையை நனைக்கமாட்டான். எங்களை ஒதுக்கியே விட்டுடுவான். எங்க கதம்பாவும், கஸ்தூரியும் தங்கக் கம்பிங்க... லவ்வு கிவ்வுன்னு வேற வழிலாம் தேடிக்கிட்டுப் போவாதுங்க... மூஞ்சை அந்தப் பக்கம், இந்தப் பக்கம் திருப்பாதுங்க... அதனால நான் அவுங்களுக்கு எப்படிக் கல்யாணம் பண்ணி வைப்பேன்... நீங்களே சொல்லுங்க... ஒங்களுக்கு ஒங்க ஜாதியிலேயே நல்ல பொண்ணு வரும்... நல்லா சீர் செனத்தியோட யார் மனசுக்கும் கஷ்டமில்லாமக் கல்யாணம் பண்ணிக்குங்க.. சந்தோஷமாக் குடும்பத்தை நடத்துங்க... நீங்க அனுவசியத்துக்கு எம்பொண்ணைத் தான் கட்டிக்குவேன்னு சொல்லி, அப்படியே நடக்குதுன்னு வெச்சிக்குங்க... அப்புறம் ஏடாகூடமா ஏதாவது ஆய்டிச்சின்னு அனுசூயா அப்புறம் ஆயுசு முச்சூடும் அதையே நெனைச்சிக்கினு கஷ்டப்படும்... ஐயோ நம்பளால தானே இந்த மாதிரி ஆய்டிச்சி... நம்பளாலேதானேன்னு சொல்லிக்கினுச் சொல்லிக்கினு அழும்.. அனுசூயா நெஜமாலுமே சந்தோஷமா இருக்கணும்னு அபிப்ராயப்பட்டீங்கன்னு நீங்க வேற ஒரு பெண்ணைக் கட்டிக்கறது தான் நல்லது. பாவம். தனியா நீங்களும் எவ்வளவு நாளைக்குத்தான் சுயம்பாகமாவும் இருந்துக்கிட்டுக் கஷ்டப்படுவீங்க?''

''அ னு சூ ய ா என்ன சொல்லுது?'' தயங்கித் தயங்கித் தொண்டையிலிருந்து ஒவ்வொரு வார்த்தையாய் இழுத்துக் கேட்டான் பாலா.

''அதான் சொன்னேனே அதுக்கு ஒரு ரெலையான நெனைப்பே இல்லேன்னு. இப்ப நீங்கன்னு சொல்லும். நாளைக்கு 'ஐயோ ஒங்களைப் போய் கட்னேனே'ன்னு சொல்லும்.''

''அதைப் பார்த்து ஒரு வார்த்தை பேசிட்டுப் போவட்டுங்களா?'' கேட்டுவிட்டு ஒரு சுண்டைக்காய் அளவு நம்பிக்கையுடன் அவர் முகத்தைப் பார்த்தான் பாலா. எந்தத் திரைக்குப் பின்னாலாவது அனுசூயா நிற்கிறாளோ என்ற சபலத்துடன் சுற்று முற்றும் பார்த்தான். ஏமாற்றம்தான்!

''கல்யாணம் நிச்சயமான பொண்ணை எங்க ஜாதியிலே வெளிய போகக்கொள்ள கூட வுட மாட்டாங்க. அப்புறம் மூணுவது மனுஷாள் கிட்டல்லாம் பேசறதுக்கு மாத்திரம் சரின்னு சொல்'விடப் போறாங்க?'' என்றார் வீரராகவன் இரக்கமேயில்லாமல்.

அவர் மார்பைப் பிளந்து, இருப்பது இதயந்தானா இல்லை இரும்பா என்று பார்க்க வேண்டும் போல் இருந்தது. அப்படியே அவன் நாற்காலியில் சரிந்து போனான்.

உலகத்திலேயே அவனுடைய மாபெரும் எதிரியாக அனுசூயா தென்பட்டாள்.

'ஏன் இப்படி என்னை 'அலைக்கழிக்கிறாய் பெண்ணே' என்று விடாமல் புலம்ப ஆரம்பித்தான் பாலா.

(தொடரும்)

---

● சிலந்தி தான் வலை பின்னுவதற்குப் பயன்படுத்தும் பசை இழையானது மெல்லிய அதே அளவுள்ள எஃகு இழையை விட வலிமை மிக்கது.

● ஸ்வீடன் நாட்டில் உள்ள ஒரு நகரத்துக்குப் பெயர் 'ஏ'

டி. நாராயணமூர்த்தி
ஆதாரம்: ''இட்ஸ் எ ஸ்பேக்ட்''



குழந்தை பிறந்த 6 மணி நேரத்திற்கு பின்பு, அது முதல் தடுப்பு ஆகாரம் பெறுகிறது. அதை ஊட்டுவது நீங்கள்தான்.



இயற்கையின் ஒரு வரப்பிரசாதம் தாய்ப்பால்.

தாய்ப்பாலில் இயல்பாகவே நோய் எதிர்ப்புப் பொருள் அடங்கியுள்ளது. புதிதாகப் பிறந்த குழந்தைக்கு, வயிற்றில் வாயுக்கோளாறு மற்றும் இதர நோய் களுக்கு எதிரே பாதுகாப்பு அளிப்பதில் முக்கிய பங்காற்றுகிறது தாய்ப்பால்.

## இயல்பான ஊட்டச்சத்து

இயற்கையும் அறிந்துள்ளது: குழந்தைக் கான தாய்ப்பாலே உன்னத உணவாககு பவை அதில் இயல்பாக சரிவிகிதமாகக் கலந்துள்ள உடல் வளர்ச்சிச் சத்துக்கள் (புரதம்), சக்தி தரும் சத்துக்கள் (கார்போ ஹைட்ரேட்டுகள், கொழுப்பு) ஆரோக்கியமான பாதுகாப்புச் சத்துக்கள் (வைட்டமின்கள்) ஆகும் (உதாரணமாக தாய்ப்பால் குடிக்கும் குழந்தைகள் வைட்டமின் 'சி' குறைவினால் ஏற்படும் ஸ்கர்வி நோயால் பொதுவாக பாதிக்கப் படமாட்டார்கள்) முலைப்பால் உண்ட குழந்தை பாதுகாப்பையும் தன்னம்பிக்கை யையும் பெறுகிறது. காரணம், பசியைத் தணித்திட குழந்தை முலைப்பாலை உறிஞ்சும்போது, நீங்கள் குழந்தையை அரவணைத்துப் பாசத்தையும் சேர்த்தல்லவா பாலூட்டுகிறீர்கள்.

## உலகளாவிப் பிரபலமடைகிறது.

அதன் ஊட்டச்சத்து மற்றும் இதர நலன்கள் விரிவாகவும் அதிகமாகவும் உணரப்படுவதால் மேலை நாடுகளிலும் கூட முலைப்பால் கொடுத்தல் மிகவும் அதிகமாக பிரபலமாகி வருகிறது.

உங்கள் உடல் நல பாதிப்பு அல்லது பால் பற்றாக்குறை ஆகியவற்றால் நீங்கள் குழந்தைக்கு பால் கொடுக்கமுடியாமல் போனால் என்ன செய்வது?

உங்கள் குழந்தைக்கு நீங்கள் சிறந்த 'தாய்ப்பால் மாற்று' தேர்ந்தெடுக்க வேண்டும்.

## ஸ்ப்ரே ட்ரை செய்யப்பட்ட அமுல்ஸ்ப்ரே

அமுல் ஸ்ப்ரே-நன்கு சமச்சீராக கலக்கப் பட்ட சத்துக்களுடன் கூடியது—பிரதம தரமுள்ள புரதம், ஜீரணிக்க எளிதான கொழுப்பு மற்றும் கார்போ ஹைட்ரே டுகள், சரியாகக் கலந்துள்ள வைட்ட மின்கள் மற்றும் தாதுக்கள்.

ஏற்கனவே கொதிக்க வைத்த வெது வெதுப்பான நீரில் அதைக் கலப்பது எளிது. முன்னாலேயே அதை பசைபோல் தயாரிக்கவேண்டிய அவசியம் இல்லை.

## சிக்கனமானது

டின்னில் அடைக்கப்பட்டுள்ள குழந்தை உணவுகளில் மிகவும் சிக்கனமானது, அமுல் ஸ்ப்ரே. காரணம், அது இந்தியாவின் 'வெண்மைப் புரட்சிக்கு' முன்னோடியான நவீன பால் நிறுவனத்தால் தயாரிக்கப்பட்டது.

ஆனால் கொதிக்க வைத்த நீர், சுகாதார முறையில் கிருமி நீக்கம் செய்யப்பட்ட பாத்திரங்கள் மற்றும் பால் புட்டிகள் உபயோகித்தலை உறுதி செய்து கொள்ளுங்கள். பால் கலக்கப்படும்போது அதிகம் நீராகி விடுவதை தவிர்ப்பதற்கும், போதுமான ஊட்டச் சத்துக்களை உறுதி செய்வதற்கும் டின்மீது குறிப்பிட்டுள்ள வழிமுறைகளை கவனமாக பின்பற்றுக.




# அமுல்ஸ்ப்ரே

தாய்ப்பாலுக்கு அடுத்ததுதான்

**இலவசம்! அமுல் வளர்ப்பு வழி—**
இதில் அடங்கியுள்ளவை: கருத்தரித்தல், பேறு காலத்திற்கு முன் கவனிப்பு, பிரசவம், தாய்ப்பால் ஊட்டுதல், வெளியில் கிடைக்கும் உணவு வகைகள், லேசான தானிய உணவு தருதல், குழந்தையின் அன்றாடக் கடன்கள், குழந்தையின் வளர்ச்சி, நோய்த் தடுப்பு, முதலுதவி, பொதுவான நோய்கள், நோயுற்ற குழந்தையைப் பாதுகாத்தல் ? தமிழ், இந்தி, மராத்தி, குஜராத்தி, ஆங்கிலம், தெலுங்கு மற்றும் மலையாள மொழிகளில்.

உங்கள் பெயர் மற்றும் முகவரியுடன் ரூ. 1.25 தபால் தலை ஒட்டி எழுதுக இம் முகவரிக்கு: தபால் பெட்டி எண் 10124, பம்பாய் 400 001.



விற்பனைக்கு விடுப்போர்:
குஜராத் கோ-ஆப்பரேடிவ் மில்க் மார்க்கெட்டிங் :பெடரேஷன் லிமிடெட், தபால் பெட்டி எண் 10, ஆனந்த் 388 001, குஜராத் மாநிலம்.

# ஆளாகி நாளாச்சு

தேவிபாலா



'மெனி ஹாப்பி ரிடர்ன்ஸ் ஆஃப் த டே'.

கண்ணை விழித்ததும் எதிரே வந்து சொல்லி விட்டுப் போகிறான் அண்ணா.

என்ன வயசு எனக்கு?

டிரஸ்ஸிங் டேபிள் முன்னால் உட்காரும்போது, நெற்றியோர வெள்ளிக் கம்பிகள் நினைவுபடுத்துகிறது.

இன்று முப்பது.

கண்ணுக்கடியில் ஒரு பை...

புதிதாகக் கொஞ்சம் சுருக்கங்கள்...

ஹாப்பிதானா?

'இவளுக்கு இன்னுமா கல்யாணம் ஆகலே?'

அப்படியே நம்பினால்...

'ஏன் இன்னும் முடியலே... என்ன குறை இவகிட்ட?'

அலசிப் பார்க்கத் துடிக்கும் ஆர்வங்கள்.

கொஞ்சம் உடம்பைப் போட்டுக் குதப்பும் குசும்புத்தனம்...

அவசரமாக மேக்கப்பை முடித்துக் கொண்டு வெளியே வர டைனிங் டேபிளில் சூடான இட்லிகளோடு மன்னி....

''காயத்ரி உனக்குப் பிடித்த பாயசம் பண்ணியிருக்கேன்...''

கரிசனமான பார்வையைக் கண்களில் அணிந்து கொண்டு மன்னி சிரிக்கிறாள்.

இவளுக்குப் பிடித்த பால் பாயசம்...!

ஆனால் இவளுக்குப் பிடித்த இன்னொன்றை மட்டும் இவர்களால் தர இயலாது...

அது.... கல்யாணம்....

இவளை அனுப்பிவிட்டால் அந்த வீட்டின் காமதேனு போய்விடும். முதல் தேதிக்கு முன்னாலேயே ஆயிரத்தைநூறு ரூபாய் பணம் கிடைக்காமல் மாதத்தை ஓட்ட முடியாது. ~~~

இன்ஸ்டால்மெண்டில் பணம் கட்டிப்பெற

அனுமதிக்கும் டி. வி.யும், ஃப்ரிட்ஜும்... இன்ன பிறவும்

அவர்களை மறந்துபோகும்....

'அத்தே... நீ ரெடியா? அஞ்சு நிமிஷத்துல நானும் வந்திர்றேன்!' தீபா — பதின்மூன்று வயது — அண்ணாவின் பெண் அவசரமாகப் புறப்படுகிறாள்.

''அத்தே! இந்தப் பட்டனைக் கொஞ்சம் போட்டு விடேன்....''

முதுகுப்புறத்தைக் காட்டிக் கொண்டு அத்தையின் முன் அவள் நிற்க,

மன்னி சீறுகிறாள்.

''வாசக் கதவு திறந்திருக்கு... உனக்கு அடக்கம் பத்தாது தீபா... நீ இன்னும் குழந்தை இல்லே....''

''பாரத்தே... அம்மாவை!''

பதில் பேசாமல் பட்டனைப் போடுகிறாள் காயத்ரி.

அகன்ற அந்த முதுகும் செழுமையான தோளும்... சரேலென இறங்கும் சரிவுகளும் அந்தப் பெண் 'அதற்கு'த் தயாராகிக்கொண்டிருக்கிறாள் என்று புரிய....

''போம்மா... சீக்கிரம் புறப்படு.... டயமாச்சு!''

கான்வென்ட் டிரஸ்ஸில் அந்தப் பெண் பளிச்சென்று வெளியே வர அவளோடு புறப்படுகிறாள் காயத்ரி.

பஸ் ஸ்டாண்ட்வரை தீபாவுடன்தான் வருவாள்.

வாசலைக் கடந்து, தெருவில் இறங்கி நடக்கத் தொடங்கும்போது...

''ஏன் அத்தே, உனக்கு இன்னிக்கு எத்தனை வயசு அத்தே?''

''முப்பதும்மா...''

அதற்கு மேல் ஒன்றும் கேட்காமல், அந்தக் கேள்வியே அபத்தமோ என்பது போல மௌனமாக வருகிறாள் தீபா.

''டேய் மச்சி.... குட்டி அமர்க்களம்டா...

வெள்ளிக் கண்ணு மீனா....

வீதிவழி போனா....

தய்யத் தக்க தய்யத் தக்க.... உய்யா..'

பாட்டும் விசிலும் காதைப் பிளக்க, சரேலெனத் திரும்பிப் பார்க்கிறாள் காயத்ரி.

'வாத்யாரே.... அவங்கம்மா முறைக்குதுடா... வா போலாம்.'

அவர்கள் நடையைக்கட்ட...

'அவங்கம்மா.....'

அந்த வார்த்தை தந்த வலியில், பஸ் ஸ்டாண்டை மறந்துபோய் இன்னும் நடக்கிறாள்.

''அத்தே.... ஏன் இன்னும் போறே?''

''ஓ.... ஸாரி.... உன் பஸ் வந்தாச்சு... புறப்படும்மா....''

''சாயங்காலம் சீக்கிரமா வா அத்தே... சினிமாக்குப் போலாம் இன்னிக்கு...''

''பார்க்கலாம்...''

இதே விசிலும் இதே வாலிபக் கூட்டமும் தன்னைத் தொடர்ந்த அந்த நாட்கள்....!

மடித்துக் கட்டிய இரட்டைப் பின்னல் முதுகில் வழிய....

காதில் குடை ஜிமிக்கி...

ஜார்ஜெட் தாவணி....

காயத்ரி தெருவில் இறங்கினாலே பெருமூச்சு விடும் பெரிய கூட்டமே ஒன்று உண்டு.

இன்று.....

'அவங்கம்மா முறைக்குதுடா....'

அதற்குள் பஸ் வந்துவிட....

வழக்கமான அதே கண்டக்டர் புன்சிரிப்புடன்... டிக்கட்டைக் கிழித்துப் பட்டும் படாமலும் தருகிறான்.

முன்பெல்லாம் வேண்டுமென்றே உள்ளங்கையில் வைத்து அழுத்துவான்.

ஆபீஸில் நுழைகிறாள்.

''என்ன காயத்ரி இன்னிக்குப் பொறந்த நாளா? சர்வீஸ் ரிக்கார்ட் பார்த்தேன் நேத்திக்கு...'' குகை போன்ற பெரிய வெற்றிலைக் கறையோடு கேட்கிறார் நாப்பத்தெட்டு வயசு நாதமுனி.

''எப்ப மிஸ்ஸை மிஸ்பண்ணப் போறே?''

பதில் பேசாமல் சீட்டுக்குப் போகிறாள்.

முன்பெல்லாம் இதே நாதமுனி கண்ணாடியின் வழியாக இவளை உரித்திருக்கிறார். சபலத்தோடுபார்த்திருக்கிறார்....சமீப நாட்களாக அந்தப்பார்வைகாணாமல் போயிருந்தது.

''ஹாப்பி பர்த்டே மிஸ் காயத்ரி... எப்ப சாப்பாடுபோடப்போறீங்க?'' — அக்கவுண்ட்ஸ் ஆராவமுதன்....

''வாங்களேன், இப்பவேஹோட்டலுக்குப் போகலாம்...''

''நோ.... நான் சொல்றது முகூர்த்தச் சாப்பாடு....''

ஓ....அது எனக்கும் தெரியும் என்பது போலப் பார்த்துவிட்டு டைப்ரைட்டரைத் தூர கட்டிக் கண்களை மூடி சீட்டில் சாய்கிறாள் காயத்ரி. இவர்களால் கேட்கப்படும் இதே கேள்விபத்து வருஷங்களுக்கு முன்னால்...

''என்டாராம்...காயத்ரிக்கு வயசு இருபதாச்சுடா... ஜாதகத்தை எடுக்க வேண்டாமா?'' — அம்மா.

''இப்பத்தான் டிகிரி முடிச்சிருக்கா. அதுக் குள்ள என்னம்மா அவசரம்... குழந்தை-தானே, கொஞ்ச நாள் போகட்டும்...''

எங்கே நிச்சயமாகிவிடுமோ என்ற பயம் அண்ணாவுக்கு... அத்தனையும் தான்தானே செய்ய வேண்டும்?

அப்பா இல்லாத அந்தப் பெண்ணைக் கரையேற்றும் பொறுப்பு...

காயத்ரி எம். ஏ. முடித்து, வேலையில் சேர்ந்து சம்பளம் அந்த வீட்டில் மெல்ல மெல்ல ஒரு மினுமினுப்பைச் சேர்க்கத் தொடங்க,

கருவேப்பிலை திரும்பிய நீர்மோர்...

கட்டித் தயிராக....

காய்ந்த சப்பாத்தி....

முறுகலான தோசையாக....

கல்சட்டியும் வற்றல் குழம்பும் காணாமல் போக...

அந்த மாடு தரும் கவையான பால் ஒரு வித போதையில் அவர்களை ஆழ்த்த,

அவ்வப்போது அம்மாவைத் திருப்திப்படுத்த....ரெண்டொரு வரன்...

''சரி, போன வாரம் வந்தவன் அதிகம் சம்பாதிக்கிறானே....''

''என்னம்மா நீ.... அவன் வெறும் பி.ஏ...நம்மபொண்ணு



எம்.ஏ.... இவனுக்கு ஒரு பி.ஏ.வோ... எம்பி.ஏ.வோ வேணுமா?''

அதுவும் வந்தது.

ஆனால் விலை கொஞ்சம் அதிகம்.

மார்க்கெட்டில் அவர்கள் ரேட் கூடுதல்.

வியாபாரம் படியவில்லை.

எல்லாம் பொருந்தி ஒருவன்வர...

முன்பக்கம் வழுக்கை... பார்த்தாக் கிழவனாட்டம் இருக்கான். கொஞ்சம் உயரமும் கம்மிதான்...

அம்மா இருந்தவரை இந்த நாடக ஒத்திகை.

ஒரு நாள் ஆபீஸ் முடிந்து வந்தபோது, வீட்டில் அம்மா இல்லை.

பாத்ரூமில் கால் வழுக்கி.... தலையில் தோய்க்கும் கல் மோதி... ஆஸ்பத்திரிக்கு அள்ளிக்கொண்டு போய்....

'ஸெரிப்ரல் ஹெமரேஜ்' என்று ஏதேதோ புரியாத மருத்துவ வார்த்தைகளை அவர்கள் சொல்ல....

மூன்றாவது நாள்....

முடிந்துபோனாள் அம்மா.

கதறிக் கதறி அழுதாள் காயத்ரி.

பத்து முடிந்தது.

வந்த சொந்தமெல்லாம் வழிக்கு என்ன கட்டிக்கொள்ளலாம் என்று யோசிக்க,

அண்ணா வந்தான் பக்கத்தில்....

''காயத்ரி இதுவரைக்கும் ஆறுயிரம் ரூபாய் செலவாயாச்சு....''

''அதுக்கு?''

''உனக்கு லோன்ஏதாவது கிடைக்குமா?''

'ஏன் உனக்கும் அம்மா தானே?' என்ற கேள்வி நாக்கு நுனிவரை வந்து செத்துப் போனது.

அம்மாவை எரித்தபோது, காயத்ரியின் ஜாதகத்தையும் அதே நெருப்பில் போட்டிருக்கலாம்.

அப்படி ஒரு சமாச்சாரமே துப்புரவாக அங்கே மறந்து போனது.

காயத்ரி மறக்கவில்லை.

''நம்மாத்துல ஒரு ஏர்-கூலர் வாங்கணும்.. சம்மர்ல உள்ள உட்கார முடியலே'' — மன்னி.

''பெட்டிஷனைத் தலைவர் கிட்டக் குடு.''

அண்ணா இப்போதெல்லாம் தமாஷாக இவளைத் 'தலைவர்' என்கிறான். — காரியக் கும்பிடு!

தீபாவை அத்தையிடம் ஒட்டவைத்து விட்டு அடுத்த அறையில் அவர்கள் அடிக்கும் கூத்து... சொல்ல வெட்கமாயிருக்கு!

''என்ன காயத்ரி யோசனை?''

சட்டெனக் கண்களை விழிக்கிறாள் காயத்ரி.

எதிரே வினோத்.

''ஹாப்பி பர்த்டே காயத்ரி...''

''தாங்க்ஸ்....''

பைக்குள் கையை விட்டு அந்த இன்விடேஷனை எடுக்கிறான் வினோத்.

''அடுத்த வாரம் எனக்குக் கல்யாணம் காயத்ரி... கட்டாயம் வந்துடு.''

''கங்கிராட்ஸ் வினோத்.''

அதைச் சொல்லும்போது ஏனோ தொண்டையை இடறுகிறது.

ஒரு சமயத்தில் இவளை ரொம்பவும் காதலித்தவன் வினோத்.

## அருள் வாக்கு

கண்ணுக்கு டான்ஸ், காதுக்குப்பாட்டு மனஸுக்கு நவரஸங்கள்என்பதாக இந்திரிய ஸௌக்யங்களைத் தருவதாகத் தோன்றினாலும் இந்த வித்தைகள் ஸாம வேதத்தை அடிப்படையாகக் கொண்டுஉண்டானவைஎன்பதனாலேயே இவற்றுக்குப் பெருமை ஏற்படுகிறது. வேதங்களுக்குள்ளே தாம் ஸாமமாயிருப்பதாகவும் பகவானே சொல்லியிருப்பதால் இன்னும் பெருமை!

ஸாம கானத்தின் ஸ்வரங்களிலிருந்துதான் ஸப்த ஸ்வரமும் உண்டாயிருக்க வேண்டுமென்று ஸாம கானத்தைக் கேட்கிற எவருக்கும் தெரிகிறது. ஸாம **கானம்** என்று பெயர் இருப்பதிலிருந்து அதுவே ஸங்கீத வித்யையுடன் சேர்ந்ததுதான் என்று தெரிகிறது. லலிதா ஸஹஸ்ரநாமத்தில் ''ஸாம கானப்ரியா'' என்று அம்பிகைக்கு ஒரு பெயர் சொல்லியிருக்கிறது. சிவனுக்காக அஷ்டோத்ரத்திலும் ''ஸாமப்ரியாய நம:''என்று ஒரு பெயரைச் சொல்லிவிட்டு, உடனே இது அவன் கான விசேஷத்துக்காகத்தான் என்று தெரிவிக்கிறாற் போல் அடுத்ததாக ''ஸ்வரமயாய நம: என்ற நாமாவைக் கொடுத்திருக்கிறது. மஹா விஷ்ணுவான ஸ்ரீகிருஷ்ணன் தம்மைவேதங்களில் ஸாமம் என்று சொல்லிக் கொண்டிருப்பதாகவும் பார்த்தோம்.

இதிலிருந்தே சங்கீதம் முதலான கலைகளுக்குள்ள தெய்விகத் தன்மைதெரிய வரும்.

**-ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராசார்ய சுவாமிகள்**

# தர்ம சங்கடம்



போட்டி 35

உங்களுக்கு ஏற்பட்ட ஒரு தர்மசங்கடமான நிலை, அதைச்சமாளித்த விதம் பற்றி கீழே வெற்றிடத்தில் எழுதி இந்த அரைபக்கத்தைக் கத்தரித்து அனுப்புங்கள். பிரசுரமானால் பரிசு. தவிர ஒருவருக்கு குலுக்கல் முறையில் பட்டுப் புடவை. உறையின் மேல் ''தர்ம சங்கடம்'' என்று குறிப்பிடவும்.

முடிவு தேதி: **14-1-85**

**இன்னும் 18 புடவைகள் உள்ளன. ஒன்றைப்பெறுவதில் உறுதியாகஇருங்கள். வாரம் தவறாமல் போட்டிகளில் பங்கு பெறுங்கள்.**

என் பெயர் ....................

விலாசம்: ....................

....................

**பட்டுப் புடவை பரிசுத் திட்டம்**

பெண் கேட்க வீடுவரை வந்து அவமானப் பட்டவன்....

அப்படியும்....

காயத்ரியை நேசித்தவன்.

''நீ சம்மதிச்சா... ரிஜிஸ்டர் மாரேஜ் பண்ணிக்கலாம். என்னம்மா சொல்றே?''

''ஸாரி விநோத்.... அந்த அளவு தைரியம் எனக்கில்லே....''

இப்போது.....

இன்னொருத்திக்குச் சொந்தமாகப் போகிறான்....

''நீயும் ஒரு கல்யாணம் பண்ணிட்டா நான் ரொம்பசந்தோஷப்படுவேன் காயத்ரி.''

''அதுக்கெல்லாம் பிராப்தம் வேணும்''— உதட்டுக்குள் முணுமுணுக்கிறாள் காயத்ரி.

**மா**லே வீடு வரும்போது தயாராகக் காதிருக்கிறாள் தீபா.

''அத்தே... டிபன் சாப்பிட்டுடுச் சீக்கிரம் கிளம்பு....''

அந்தக் குழந்தையின் முகத்தில் மற்றது மறந்துபோக, கிளம்புகிறாள் காயத்ரி.

புடவையை மாற்றிக் கொண்டு, தலையை வாரிக்கொள்ளும் சமயம்....

''அத்தே... இங்க வா சீக்கிரம்...''

பாத்ரூமுக்குள் குரல்....

''உள்ளே வா அத்தே....''

உள்ளே கசமுசவெனப் பேச்சு. ''ச்சீ... அசடு. எதுக்காக அழற... இட்ஸ் நேச்சுரல். முகத்தைத் துடைச்சுக்கோ....''

அடுத்த ஐந்து நிமிடத்தில் வெளியே வருகிறாள் காயத்ரி.

''என்ன காயத்ரி?'' — பதற்றமாக மன்னி.

''ஒக்காந்துட்டா மன்னி....''

அண்ணா வந்ததும்

மன்னி அவசரமாகச் சொல்ல....

'என்ன செய்யணுமோ, எவ்வளோ செலவாகுமோ' என்ற கவலையோடு அவன் காயத்ரியிடம் கேட்கிறான்:

''அவளுக்கு ஸ்கூலுக்கு லீவு சொல்ல வேணுமா? நாளைக்கு நீ போறச்சே சொல்லிடறியா காயத்ரி?''

நிமிர்ந்து அண்ணாவைத் தீர்க்கமாகப் பார்க்கிறாள் காயத்ரி. ''ஒண்ணு செய்யறியா அண்ணா? அவளோட படிப்பை இதோட நிறுத்திடேன்....''

''என்ன காயத்ரி உளர்ற? இது என்ன பழைய காலமா? வயதுக்கு வந்த பெண்ணை உள்ளே பூட்டிவைக்க? உனக்கு மூளை குழம்பிப் போச்சா?''

''இல்லண்ணா, தெளிவாத்தான் பேசறேன். இந்தப் படிப்பு முடிஞ்சா பெரிய படிப்பு படிக்கச்சொல்லும். அது முடிஞ்சா வேலைக்குப் போகச் சொல்லும்... ஆயிரக் கணக்கில சம்பாதிச்சு... வீட்டு வசதிகளை அதிகமாக்கி.. அந்தச் சம்பளமும் அவளும் அவசியம் வேணுங்கற நிலை உருவாகி.... முப்பது வயசு வரைக்கும் முத்திப்போய்.... ஓ.... நோ! தீபா அந்த நிலைக்கு வர வேணாம். இன்னொரு காயத்ரி இந்த வீட்ல உருவாகக் கூடாது.. உருவாக விடமாட்டேன்...''

''ஓ...'வென அலறிவிட்டு... பெரிதாக அழத் தொடங்கும் தங்கையைப் பார்த்து மிரண்டுபோய் நிற்கிறான் ராம்.




# ராகமாலிகா பட்டு சேலைகள்

சுகன் ஆர்கேட்,

நெ. 12பி, நாகேஸ்வரராவ் ரோடு, பனகல் பார்க் எதிரில்

தியாகராய நகர், சென்னை-600 017

(ஞாயிறு கடை உண்டு)



✕ ''நமக்குப் பூ, செடி, கொடி, தண்ணீர் இது போதும்...''

## பார்த்ததும் கேட்டதும்

# சண்டை பிடிக்காத பாரதிராஜா

### பார்த்தது

ஏவி.எம். டப்பிங் தியேட்டருக்கு வெளியே, பாரதிராஜாவின் 'ஒரு கைதியின் டைரி' படப்பிடிப்பு.

கமலஹாசனை போலீஸ், ஜீப்பில் துரத்திக் கொண்டு வருவது போலவும், கமல் மோட்டார் பைக்கில் வாசல் கேட்டை 'ஜிவ்' அடித்து தாண்டிச் செல்வது போலவும் காட்சி.

ஒருபக்கம் 'காவல்' ஜீப் நிற்க, இன்னொருபக்கம் 'தாவல்' ஷாட்டுக்குரிய ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருந்தார் ஜூடோ ரத்தினம்.

கமலுக்குப் பதில் அவரது டூப் நின்று கொண்டிருந்தார். மோட்டார் சைக்கிளில் பறக்கப் போகிறவர் அவர்தான்.

'டைவ்' அடிக்கும் சண்டைக் கலைஞர்களுக்கு காலைப் படப்பிடிப்பிலேயே ஒரு விபத்தாம். போதாகதற்கு மாலையில் ஒன்று.

பாரதிராஜா சொன்னார்: ''இதுதான்யா என் படத்திலே சண்டையே வைக்கறதில்லே. நமக்கு அந்த பூ, செடி, கொடி தண்ணீர் இதுபோதும். பட்டுப்பட்டுன்னு கட் பண்ணிபோட்டு, என்னத்தையாவது காட்டிலாம்!''

அருகில் வந்து நின்ற புரொடக்ஷன் மானேஜரைப் பார்த்து, பாரதிராஜா, ''என்ன, காப்பி, டீ எல்லாம் வந்துடுச்சா?'' என்று கேட்க, ''வந்துட்டுது சார்'' என்றார் அவர்.

''ஆமாங், காப்பி, டீயை கொண்டு வந்து டுங்க. உருப்படியா ஒரு ஷாட் எடுக்க பாடில்லே, என்ன செய்வியோ தெரியாது. காப்பி, டீ கேன்களை வெளியே எடுத்துப் போய், வித்து, காசைக் கொண்டா!'' என்று பாரதிராஜா சொல்லவும், கும்பலில் சிரிப்டலைகள்!

சித்ரா லட்சுமணன், ஒரு இந்திப்பட வேலையின் போது தனக்கேற்பட்ட அனுபவத்தைப் பக்கத்தில் இருந்தவரிடம் சொல்லிக் கொண்டிருந்தார். ''ராஜேந்திர குமாருக்காக ஒருபடம் இந்தியில் எடுத்தோமே, அந்தப் படத்தின் புரொடக்ஷன் மானேஜரை எது கேட்டாலும் 'ஹாஜி, ஹாஜி'(ஆமாம்) என்பான். ஒரு நாள், 'என்னய்யா, இன்னிக்கு உருப்படியா ஷூட்டிங்கே நடக்கலே, நாம என்ன, '.....'ரைக்கறதுக்கா வந்துருக்கோம்'' என்றேன்.

''ஹாஜி!'' என்றான் அவன்''

ஒளிப்பதிவாளர் கண்ணனும், ஜூடோ ரத்தினமும் பாரதிராஜாவை நெருங்கி, ''அப்போ ஷூட்டிங்கை முடிச்சிடுவோமா...?'' என்று இழுக்க.. ''என்ன, இரண்டு பேரும் பேசி வைச்சிகிட்டு வந்திங்களா?'' என்றார் பாரதிராஜா.

### கேட்டது

கேமிராமேன் கர்ணனை அவரது டிரஸ்ட்புரம் அலுவலகத்தில் சந்தித்தபோது.

✕ ''அப்போல்லாம் காமிராமேன் ஆகணும்னு முதல் தகுதியா நல்ல உடம்பு இருக்கான்னுதான் பார்ப்பாங்க...''



படப்பிடிப்புக்குக் கிளம்பிக் கொண்டிருந் தார்.

வாய்ப்பு கேட்டு வந்திருந்த ஒரு புதுமுக நடிகையிடம், ''அடுத்த மாதம் தாம்மா டான்ஸ் ஷூட் பண்றோம். அப்போ உனக்குச் சொல்லி அனுப்பறேன்'' என்றார்.

அவரோடு பேசிக் கொண்டிருக்கையில்: ''இப்போது 'சாஃப்ட் லைட்டிங்' என்கிற ஒரு ஸ்டைலில்தான் போட்டோகிராபி பண்றாங்க. உங்க காலத்தில் இருந்த ஒளிப்பதிவிற்கும் இந்த சாஃப்ட் லைட்டிற்கும் என்ன வித்யாசத்தைப் பார்க்கிறீர்கள்?''

''சாஃப்ட் லைட்டிங்கிற ஸ்டைல் ஆப் போட்டோகிராபி பாக்கறதுக்குக் குளுமையாதான் இருக்கு. ஆனா நம்ம நாட்டிலே இருக்கிற எல்லா தியேட்டர்களிலும் இந்த சாஃப்ட் லைட்டிங், இதே எஃபக்டில் தெரியுமாங்கறதுதான் கேள்வி.

''டூரிங் தியேட்டர்களிலே ஓவர் லைட்டிங் பண்ணியபடங்களே மங்கலாகத்தான் தெரியும். இந்த சாஃப்ட் லைட்டெல்லாம் பண்ணினா அங்கே காட்டற புரொஜக் ஷன்லே ஒரே இருட்டாதான் தெரியும்.

ஏன், மெட்ராஸ் சிட்டியிலேயே இரண்டு, மூன்று தியேட்டர்லேதான் புரொஜக்ஷன் பர்ஃபெக்டா இருக்கு. மீதி தியேட்டர்களிலே, நாம என்ன லைட்டிங் பண்ணினாலும் எடுபடாது..''

''ஒளிப்பதிவுத்துறைக்குபுதிதாக வந் திருப்பவர்கள் பேக்லைட் கொடுத்தே நிறைய ஷாட்ஸ் எடுக்கிறாங்க. இது, பழையவர்களின் போட்டோகிராபியில் இல்லாத ஒரு அம்சம்தானே?''

''அதெல்லாம் கிடையாது. இந்த பேக்லைட்டிங் சிஸ்டம் எல்லாம் அந்தக் காலத்திலேயே பலர் பண்ணி, ஓல்டு ஸ்டைல்னு கைவிட்டதுதான். இப்போ, கலர்லே காட்டும்போது உங்களுக்குப் புதுமாதிரி தெரியுது.

''எமோஷனான சீன்களில் ஆக்டர்களின் பேச்சும், ஆக்ஷனும்தான் முக்கியம். உட்கார்ந்து இருக்கிற மேஜை, நாற்காலி அல்ல. பேக் லைட்டிங்கினால் ஷாட்டுக்கு ஒரு அழகு வேணுமானா கிடைக்கலாம். ஆனால் கதைக்கும், காட்சிக்கும் அது எந்த வகையில் உதவும்?''

''கறுப்பு —வெள்ளையை விட கலர்பிலிம் நெகடிவ் சீக்கிரமா ஃபேட் ஆகிவிடுகிறது என்று சொல்லப்படுகிறதே...?''

''உண்மைதான். நெகடிவ்வை ஏர்-கண் டிஷன்லே ஸ்டோர் பண்ணி வைக்கிறோமே. அதை சில முறைகளோட செய்யணும். அதை இங்கே யாரும் கவனமா அமுல்படுத்தறதில்லே. அப்படிப்பண்ணினால் ரொம்ப வருஷத்துக்கு ஃபேட் ஆகாது. ஆனால், அதுக்கும் ஒரு கால கட்டம் இருக்கு. அதைத்தாண்டிப் போனால் கவனமா ஸ்டோர் பண்ணினாலும் மங்குவது மங்கித் தான் போகும். ஒரு பிளாக் அண்ட் ஒயிட் படத்தை 25 வருஷம் நம்பற மாதிரி கலர்ப்படத்தை நம்ப முடியாது''

''நீங்க எப்போ சினிமா துறைக்கு வந்தீர்கள்? ஆரம்பத்திலிருந்தே ஒளிப் பதிவுத்துறைதானா...?''

''தேவதாஸ் படத்திலே கேமிரா அப்ரண்டீஸா ஒர்க் பண்ணினேன். அதுதான் என் முதல்படம். ஆரம்பத்தி லிருந்தேகாமிராதுறையில்தான்இருக்கிறேன். ஆரம்பத்தில் பி.எஸ். ரங்காவிடமும், சுப்பாராவிடமும் வேலை கற்றுக் கொண்டேன்.

''ஏரி பிளக்ஸ் வராத காலம் அது. மிக்ஸல் கேமிராவைத் தோளிலே தூக்கிக் கொண்டு ஓடுவேன். என்ன வெயிட் தெரியுமா அது! இப்போதுள்ள கேமிராமேன்களை மிக்ஸலைத் தூக்கு என்றால், சினிமாவே வேண்டாம் என்று ஓடிவிடுவார்கள். அப்போ, கேமிராமேன் ஆகணும்னா முதல் தகுதியா நல்ல உடம்பு இருக்கான்னுதான் பார்ப்பாங்க''

''நீங்கள் ஏன் கௌபாய் டைப் படங் களையே டைரக்ட் செய்கிறீர்கள்?''

''நான் ஏன் குடும்பப்படமும், கண்ணீர் கதையும் எடுக்கவேண்டும்? அதற்குத்தான் இங்கு எத்தனையோ பேர் இருக்கிறார்களே. ரிவஞ்ச் சப்ஜெக்ட்டு களையும், பொழுதுபோக்கான சண்டைப் படங்களையும் எடுக்கத்தான் இங்கே ஆட்கள் குறைவு. எனவேதான் கௌபாய் டைப் படங்களை என் ஸ்டைலாக வைத்துக் கொண்டேன். அந்த வகையில் நான் எடுக்கிற படங்கள் வியாபாரரீதியாக நல்ல லாபம் கொடுக்கின்றன. சமீபத்தில் வெளிவந்த எனது 'இது எங்க பூமி' படம் அதனோடு வெளிவந்த மற்ற படங்களை விட நிறைய வசூலைப் பெற்றிருக்கிறது! இது போதாதா?'' என்று கேட்டு விட்டு, தம் முரட்டு மீசையைத் தடவிக் கொண்டே சிரித்தார் கர்ணன்.

—சம்பத்ஜி

புகைப்படங்கள்: ஜெப்மோகன்

---

இங்கிலாந்தில் ஒரு கிரேன் ஆபரேட்ட ராகப் பணிபுரிந்த ஜான் ஆடம்ஸ் என் பவரால் புகைப் பிடிக்கும் பழக்கத்தை விடமுடியவில்லை. ஒரு நாள் கிரேன் மேல் இருந்தபோது அவரிடமிருந்த ஒரே சிகரட் கீழே விழுந்து விட்டது. உயரமோ ஐம்பத்தாறு மீட்டர்கள். சோம்பலாக இருந்ததால் அவர் கீழே வரவில்லை. மறுநாள் அவர் தாமாகவே தம்மிடமிருந்த சிகரெட்டுகளைக் கீழே போட்டார். இப்பொழுது சிகரெட் பிடிப்பதையே நிறுத்திவிட்டார்.

வீக் எண்டிலிருந்து ஏ.வி. தேவன்



# குறும்பு செய்யும்










## வாசகர் பங்கு

### அடி வாங்குவாரா அம்பையர்?

கல்லூரி மைதானத்தில் ஹாக்கிப் பந்தயம் நடந்து கொண்டிருந்தது. அம்பயர் விசில் ஊதுவது போலவே என் சுட்டிப் பயலும் ஊத, விளையாட்டு நின்று விட்டது. உண்மை அறிந்து அனைவரும் அவனை விரட்ட, நான் கோபத்துடன் கையோங்கினேன். ''ஏம்மா! அம்பயரும் விசில் ஊதியதற்கு அவர் அம்மாவிடம் அடி வாங்குவாரா'' என்று பரிதாபமாகக் கேட்டான் அவன். கோபம் பறந்து போயிற்று.

எஸ். கலா, கோவை

### 'அடிக்காதே அப்பா வரட்டும்'

விஜி கண்ணாடியை உடைத்துவிட்டாள். அடிக்க என் கை ஓங்கியதும் ''இரு அம்மா, அப்பாவும் வரட்டும் இரண்டு பேரும் சேர்ந்து ஒரே வழியாக அடித்து விடுங்கள். எப்படியும் அப்பா வந்தா அடிக்கத்தான் போறார்'' என்று அந்த ஐந்து வயதுப் பிஞ்சு சொன்னபோது நெகிழ்ந்து போனேன்.

வி. மீனாக்ஷி, பொள்ளாச்சி

### யார் வீட்டுக் குழந்தை

கடைக்குட்டி பிரசன்னா தெருவில் விளையாடப் போய்விட்டால் சாப்பிடக் கூட வர மாட்டாள். அவள் ஒரு வழியாக வீடு திரும்பும் போது ''ஐயய்யோ யார் வீட்டுக் குழந்தை இது நம்ம வீட்டுக்கு வந்துடுத்தே?'' என்று கேலி செய்வோம். விக்கித்துப் போய் விடுவாள் பிரசன்னா. ''நான் இந்த வீட்டுக் குழந்தை தான்'' என்று அழுவாள். சற்று நேரம் விஷமம் அடங்கும்.

தி. சௌந்தர்ராஜன், குத்தாலம்

### தம்பி மனசு தங்கம்

சின்னவன் எல்லாப் பாடத்திலும் ஏராளமாய் மார்க் வாங்குவான். பெரியவன் நேர் மாறுதல். நான் கோபமாக அவனைத் திட்டினேன். இருவரையும் ஒப்பிட்டுப் பேசினேன். உடனே சின்னவன் 'அழாதே அண்ணா. அடுத்த முறை நான் கொஞ்சம் குறைச்சலா மார்க் வாங்குகிறேன்' என்றான். சிரிப்புத் தாங்கவில்லை எனக்கு. கோபம் போன இடம் தெரியவில்லை.

ஜீவா சத்தியசீலன், மேட்டூர் அணை

### சமயோசிதம் கை கொடுத்தது

தோழியுடன் தெருவில் நின்று பேசிக் கொண்டிருந்தபோது இரண்டாவது மாடி வீட்டின் கைப்பிடிச் சுவரிலிருந்து என் மகனின் குரல் கேட்டது: ''அம்மா நான் கீழே குதிச்சுடுவேன்.'' எனக்கு முதுகுத் தண்டு ஜில்லிட்டது. பதறினால் பொல்லாதவன் குதித்தே விடுவான் என்று தெரியும். மெதுவாகச் சொன்னேன்: ''இருடா நானும் வரேன் சேர்ந்து குதிக்கலாம்'' என்று. ''சீக்கிரம் வா'' என்றான். மின்னல் வேகத்தில்

சென்று அவனைப் பிடித்துக் கீழே இறக்கினேன்.
**சர்குணா ராமமூர்த்தி, பெங்களூர்-8**

**நகைச்சுவை உணர்வு காத்தது**

படுத்தல் தாங்க முடியாமல் என் ஏழு வயது மகனை அடிக்கப் போனபோது அவன் வெளியே ஓடிவிட்டான். அவனைப் பிடித்து வர பெரியவனை அனுப்பினேன். அவன் தம்பியைக் குண்டு கட்டாகத் தூக்கி வந்த போது 'கையையும் கால்களையும் ஆட்டிக் கொண்டு ''விண்வெளியில் ராகேஷ் சர்மா'' என்றான் சிரிக்காமல். எனக்கும், மூத்த மகனுக்கும் சிரிப்பு வந்து விட்டது. சமயம் பார்த்துத் தப்பி ஓடிவிட்டான்சின்ன பிள்ளை.
**ஆர். சரோஜினி, மதுரை.9**

**நெய் மணக்கும் தரை**

உமாசங்கரைக் கட்டிப் போடாமல் எந்த வேலையையும் செய்ய முடியாது. ஒரு நாள் மறந்து விட்டேன். துணி துவைத்துவிட்டு வந்து பார்த்தால் சமையலறையில் நெய்யை கொட்டி ஒரே அமர்க்களம். எனக்குத் தாங்கமுடியாத கோபம், உமாசங்கரோ வெகு சமர்த்தாக நான் கட்டிப் போடும் கயிறைக் கொண்டு வந்து நீட்டி இடுப்பையும் காட்டிய போது கரைந்து போனேன்.
**பி. பானுமதி, திருச்சி-21**

**'இன்னிக்கு ஸண்டே'**

அவசரமாக வெளியே கிளம்பிக் கொண்டிருந்த சமயம் கேள்வி கேட்டு நச்சரித்துக் கொண்டிருந்தான் என் பையன். ''சும்மா படுத்தினா பூச்சாண்டியைக் கூப்பிடுவேன்'' என்றேன். வந்த பதில் என்னைச் சிரிப்பிலும் ஆச்சரியத்திலும் ஆழ்த்தியது: ''இன்னிக்கு ஸண்டே ஆச்சேம்மா எல்லாருக்கும் லீவ், வரமாட்டாங்க'' என்றான்!
**காமாக்ஷி சந்திரசேகர், பம்பாய்-71**

**பாவம் பிள்ளையார்!**

அன்று விநாயக சதுர்த்தி. என் கவனமெல்லாம் கொழுக்கட்டை செய்வதில். என் மூன்று வயதுப் பயலின் கவனமெல்லாம் அதைச் சாப்பிட முயற்சி செய்வதில். நைவேத்தியம் செய்யாமல் சாப்பிடக் கூடாது என்று சொல்லி வைத்திருந்தேன், சற்றே அசந்த சமயம் கொழுக்கட்டைகளைக் காணும். வாயில் கொழுக்கட்டையுடன் இருந்த பிள்ளையை மிரட்டியதும் அவன் என் கையைப் பிடித்து பூஜை அறைக்குக் கூட்டிச் சென்றான். ''பிள்ளையாருக்கு வாயில் அடிபட்டுவிட்டதாம் சாப்பிட முடியாதும்மா'' என்று அவன் கட்டிக் காட்டியதைப் பார்த்தேன். பிள்ளையார் பரிதாபமாக வாயில் பிளாஸ்திரியுடன் காட்சி தந்தார். குட்டிப் பயலின் கற்பனையில் வியந்து தான் போனேன்.
**லீலா பாலகிருஷ்ணன், கல்கத்தா-26**

## வாசகர் பங்கு








# குழந்தை

### சமர்த்துத் தாரகைகள்

என் இரண்டு குழந்தைகளுக்கும் தனித் தனியே இரண்டு (Chart) செய்து சுவரில் ஒட்டினேன். காலையில் எழுப்பியதும் எழுந்தால் ஒரு ★ குறி. அதே போல் ஒவ்வொரு முறை சொல்வதைக் கேட்கும் போதும் ஒரு ★ குறி கிடைக்கும். நிறைய நட்சத்திரங்கள் வாங்கச் சொல்லி ஊக்குவித்தேன். இப்போது இருவரும் சமர்த்துகள்.

சுதா பாண்டியன், மதுரை

### பூரணத்தின் பூரணமாய்

பாதி லட்டு கொடுத்ததும் குழந்தைகள் ஒரேயடியாக அழுதன. முழுதாக வேண்டும் என்று. என் மனைவி செய்வதறியாது திகைத்தாள். நான் அவர்களுக்குத் தெரியாமல் இருந்த ஒரே முழு லட்டுவை இரண்டாகப் பட்த்து ஆளுக்கு ஒன்று 'முழுதாக'த் தந்து விட்டேன். அழுகை போன இடம் தெரியவில்லை. குழந்தைகளுக்கு லட்டு சிறிதானது பெரிசில்லை. முழுசானதில் மகிழ்ச்சி!

பெ. தங்கப்பன், பவானிசாகர்

### முன்னை முன்னால்...

நாலாவது மாடியிலிருந்து எல்லா சாமான்களையும் விட்டெறிந்து கொண்டிருந்தாள் எங்கள் மூன்றுவயதுப்பெண். எப்படிச் சொன்னாலும், அடித்தாலும் திருந்தவில்லை. ஒரு நாள் 'இப்படிச் செய்தால் அம்மாவை ஜன்னல் வழியே போட்டு விடுவேன்' என்று சொல்லி அவள் அம்மாவை தூக்குவது போல் பாசாங்குசெய்தேன். நடுங்கிப் போய் 'வேண்டாம் வேண்டாம்' என்று வந்து கட்டிக் கொண்டாள். அதற்குப்பிறகு அந்தப் பழக்கம் நின்று விட்டது

கே. ஜெயராமன், பம்பாய்-71

### 'நான் எங்கே இருக்கிறேன்?'

எங்கள் கல்யாண ஃபோட்டோ ஆல்பத்தில் தன் படம் இல்லையே என்று ஸ்ரீராம் ஒரே அழுகையாக அழுதான். உடனே அவன் ஃபோட்டோவை வெட்டி எடுத்து எங்கள் போட்டோவுக்குள் ஒட்டி விட்டோம். பயலுக்குஒரே சந்தோஷம்.

எஸ். கண்ணன், வடுவூர்

### கை கொடுத்த கலர் பென்சில்

கல்லூரியில் சக மாணவிகளாக இருந்தவர்கள் அன்று வெகுநாட்களுக்குப் பிறகு சந்தித்தோம். எங்களைப் பேச விடாமல் லூட்டி அடித்துக் கொண்டிருந்த என் இரண்டு பெண்களுக்கும் கலர் பென்சில்களையும் பேப்பரையும் கொடுத்தேன். இருவரும் மும்முரமானார்கள். நாங்களும் மணிக்கணக்கில் பேசிக் கொண்டிருந்தோம்.

உஷா ஜெயபால், பவானி

### திருவாரூர் போகத்தான்

திருவாரூரில் உள்ள மாமனாரிடம் இருந்து எதிர்பார்த்துக்கொண்டிருந்த கடிதத்தைப் பார்த்ததும் எனக்குக் கெட்ட கோபம் வந்தது. ஆமாம். என் நாலு வயதுப் பையன் அதைச் சிறிய துண்டுகளாக்கி வரிசையாக அடுக்கியிருந்தான். என்னடா என்று அவனை விசாரிப்பதற்குள் ''நம்பெல்லாம் திருவாரூர் போகத்தான் பெரிய ரயில் செய்யறேன்'' என்று அவன் சொன்னதும் சிரித்து விட்டேன்.

திருமதி சுப்ரமணியன், சென்னை-80

### அம்மாவைப் போல் நான் ஆனால்

என் மகன் படுத்தும்போதெல்லாம் நான் அவனாகவும் அவன் நானாகவும் மாறி விளையாடுவோம். அவன் செய்யத் தொடங்கிய தவறை நான் செய்யப் போவதாகச் சொன்னால் போதும் ''அப்படியெல்லாம் செய்யக் கூடாது சமர்த்துக் கண்ணு இல்ல'' என்று பெரிய மனித தோரணையுடன் பேசுவான். எந்த விஷமம் அவன் செய்ய ஆரம்பித்தாலும் அலுக்காமல் சலிக்காமல் இந்த விளையாட்டு.

கே. சசிகலா, பெங்களூர்-18

### பாகப் பிரிவினை

இரண்டு குழந்தைகளுக்கிடையே போட்டி இருந்த ஒரே மவுத் ஆர்கனை யார் வாசிப்பது என்று. அதைக் கையில் வைத்திருந்தவன் நான் கண்டித்தவுடன் கோபத்தில் அதை விட்டெறிய மவுத் ஆர்கன் இரண்டாக உடைந்துவிட்டது. அவனை அறையப்போன என்னை ''அடிக்காதீங்க மாமா அதான் இப்ப இரண்டு இருக்கே ஆளுக்கு ஒன்றை எடுத்துக்கலாமே!'' என்றான். நான் அசந்து விட்டேன்.

எஸ். ராமநாதன், திருநெல்வேலி-11

### பிஞ்சுக் கைகளில் கொஞ்சும் அழகு

நன்றாக நடக்க வந்து விட்ட பெருமையில் என் ஒரு வயது பேரன் அர்ஜுன் அலங்காரமாய் வைத்துள்ள மணி ப்ளான்டின் இலையை பறிக்க முயற்சி செய்து ஒரு நாள் வெற்றியும் கண்டான். 'ஏன் இலையைப் பிய்த்தாய்? அப்படிச் செய்யலாமா' என்று பொய்க் கோபத்துடன் நான் கேட்டதும், பிஞ்சுக் கைகளால் இலைகளைப் பொறுக்கி செடியின் மேல் நிதானமாய் வைத்துவிட்டு கை கொட்டிச் சிரித்தவாறே என்னைப் பார்த்தான். இனி ஆயுசுக்கும் அவனிடம் கோபம்வராது.

புஷ்கலா வெங்கட்ராமன், பம்பாய்-52

**ராகமாலிகா வழங்கும் பட்டுப் புடவையை குலுக்கல் முறையில் பரிசாகப் பெறுபவர்:**

**திருமதி சுப்ரமணியன்**
L-42/8, சென்ட்ரல் அவென்யூ
பெரியார் நகர், கொரட்டூர்
சென்னை-600 080

## 22

புவனேஸ்வரி பிற்பகல் இரண்டு மணிக்கு மேல்தான் மகாபலிபுரத்திலிருந்து வீடு திரும்பினுள். கூடவே விஷ்ணுபிரசாத்தும் வந்திருந்தான். நாகம்மாள் ஒன்றும் சொல்ல வில்லே. வந்த உடனே விஷ்ணு பிரசாத் நடு ஹாலில் விஸ்கி பாட்டிலேத் திறந்து வைத்துக் கொண்டு உட்கார்ந்தது நாகத்திற்கு வெறுப்பை ஏற்படுத்தியது. அருவருப்பாகக் கூட இருந்தது. அது மட்டுமல்லாமல் அவன்,

''நாகம், ஃப்ரிஜ்ஜிலிருந்து கொஞ்சம் ஐஸ் கொண்டு வந்து வை..'' என்று சட்டேயிட்டதும் எதிர்த்து நிற்க வேண்டுமென்று தோன்றியது. ஆனுலும் இத்தனே வருடங்களாகச் சட்டேகளுக்குக் கீழ்ப்படிந்து செயலாற்றின பழக்கம் உடனே ஐஸ் கட்டிகளே உடைத்து அதற்கான பிளாஸ்டிக் பாத்திரத்தில் வைத்துக்கொண்டு போய் டீபாய் மீது வைத்துவிட்டு வந்தது. திரும்பி வந்த பின்புதான் எதற்காக இவனுக்கு இப்படிக் கீழ்படிகிறோம் என்கிற எண்ணம் ஏற்பட, கிருத்திகா சொல்லிவிட்டுப் போன மாதிரி தான் புவனேஸ்வரிக்கு ஒரு நல்ல சினேகிதியாக இல்லேயோ என்கிற சந்தேகம் வந்தது.

நல்ல சினேகிதியானுல் புத்தி சொல்லித் தடுத்திருக்க வேண்டும், பாட்டுப் பாடி சம்பாதிக்கிற பணம் போதும் என்று நிறுத்தியிருக்க வேண்டும். ஒரு நல்ல குடும்பப் பெண்ணுகப் பழகியிருக்க வேண்டும். இவை எதையும் செய்யாமல் சுயநலம் காரணமாக வாயை மூடிக் கொண்டிருந்தது தப்புதான். கிருத்திகா சொன்னது நிஜம், அவள் நல்ல பெண், அவளுக்கு அம்மாவின் இந்தச் செய்கைகள் பிடிக்காமற்போனது நியாயம்தான். வீட்டை விட்டு வெளியேறினதும் விவேகமான செய்கைதான். இல்லாவிட்டால் அவளும்—

''பகல் சாப்பாட்டிற்கு என்ன பண்ணியிருக்கே நாகம்...?''.

புவனேஸ்வரியின் குரலில் சலேந்து அடுக்களேக்குள்ளிருந்து எட்டிப் பார்த்தாள். மெதுவாகக் கேட்டாள் நாகம்மாள்.

''என்ன பண்ணச் சொல்றே...?''

சட்டென்று ஒரு கோபம் எழ நிமிர்ந்து பார்த்த புவனேஸ்வரி

''அப்படின்னு, இதுவரைக்கும் ஒன்றுமே பண்ணலியா...?'' என்று கேட்க,

வழக்கமாக அந்தக் குரலுக்கு அடங்கி ஒடுங்கி பவ்யமாய் பதில் சொல்லும் நாகம்மாள் அன்று அப்படிச் சொல்லவில்லே. அசுவாரஸ்யமான குரலில், லேசாய் அலட்சியம் தொனிக்கச் சொன்னுள்.

''ப்சு...எதுவும் பண்ணத் தோணலே...''

''பண்ணத் தோணலியா...? ஏன், நாகம் உடம்புஏதாவதுசரியில்லேயா...?''-புவனேஸ்வரி கோபம் அடங்கி ஒரு மென்மையைவரவழைத்துக் கொண்டு கேட்டாள்.

அதற்கும் நாகம்மாள் சரியாகப் பதில் சொல்லவில்லே.

''உடம்புக்கென்ன, அது நன்ருத்தான் இருக்கு...''

அவளின் இந்தத் திடீர் மாறுதலுக்குக் காரணம் புரியாமற் போயிற்று புவனேஸ்வரிக்கு. 'என்ன ஆயிற்று இவளுக்கு...? நேற்று மகாபலிபுரத்திற்குப் புறப்படுகிற போது கூட நன்ருக இருந்தாளே... இப்படிப் பேசுகிருள்....?'

எதற்கும் விடை தெரியாதவளாக நிமிர்ந்தாள்.

''பின்னே, என்னதான் ஆச்சு நாகம் ...? கொஞ்சம் புரியும் படியாகத்தான் சொல்லேன்...?'' என்று சலித்துப் போய்க் கேட்க, அந்தக் கேள்விக்காகவே காத்துக் கொண்டிருந்தவளாக மடமடவென்று ஆரம்பித்தாள் நாகம்மாள்.

''நேற்று நீ மகாபலிபுரத்திற்குக் கிளம்பிப் போனதற்கப்புறம் கிருத்திகா வந்திருந்தாள்....''

''யாரு...யாரு...? கிருத்திகாவா..? நம் கீர்த்தியா...?''- அடிவயிற்றிலிருந்து பயம் பந்தாக எழும்பி நெஞ்சை அடைத்தது.

''நம்ம கீர்த்திதான்...''

''நிஜமாகவா சொல்றே...? எப்படி வந்தாள்...? எதற்குத் திடீர்னு வந்திருக்காள்...?''

''அதையெல்லாம் நான்கேட்கலே. திடீர்னுதான் கிளம்பி வந்திருக்காள். ஏரோப்பிளேனில் வந்ததாகச் சொன்னுள். கூட வயசானவராக ஒருவடக்கத்தியான் வந்திருந்தார். அவரை இன்னிக்குக் காலேயில் ஏரோப்பிளேனில்ஏற்றிஅனுப்பிட்டுத் திரும்பி வந்தாள்...''

''இப்போ எங்கே இருக்கா...? மாடியில் தூங்கருளா...?''

''இல்லே. அவளுக்கு உன் விஷயமெல்லாம் தெரிஞ்சு போச்சு; அந்த மனிதரை ஏரோப்பிளேனில் ஏற்றிட்டு வந்தப்புறம் என்னேயும் பிடிச்சுத் திட்டினுள். இத்தனே நாள் அம்மா கூடவே இருந்தியே அவளுக்குப்புத்திசொல்லக் கூடாதான்னு கோவிச்சுண்டாள். அவளே அம்மான்னு சொல்லிக்க நான் ரொம்ப வெட்கப்படறேன். வேதனேப்

இந்துமதி

படறேன். இனி என்னைத்தேட வேண்டாம்னு சொல்லு. அந்த விஷ்ணு பிரஸாத் கூட சந்தோஷமாக இருக்கச் சொல்லுன்னு சொல்லிட்டுப் பெட்டியை எடுத்துண்டு வீட்டை விட்டுப் போய் விட்டாள்...'

''வீட்டை விட்டுப் போயிட்டாளா...? நிஜமாகவா...?'' என்று பதறினுள் புவனேஸ்வரி. வார்த்தைகள் கூட உள்ளுக்குள் நடுங்கித் தடுமாறின.

''சத்தியமாகச் சொல்றேன். எதுக்கு உன் கிட்டேபோய் சொல்லப் போறேன்..?''

சட்டென்று சமையலறையின் சுவரில் சரிந்து உட்கார்ந்து கொண்டு அழத்துவங்கினுள் புவனேஸ்வரி.

''நான் இப்போ என்ன பண்ணுவேன் நாகம்...? எப்படி குழந்தையைக் கூட்டிண்டு வருவேன்...? எங்கே போயிருக்காளோ தெரியலியே...? ஒரு வேளை டில்லிக்குத் திரும்பிப் போயிருப்பாளோ...?''

''எதுக்கு புவனு இப்போ இப்படி உட்கார்ந்து அழறே..? எழுந்து அவளைத் தேடற வழியைப் பாரு...''

''எங்கேன்னு போய் நான் தேடுவேன்... எப்படிக் கண்டு பிடிப்பேன்...? அப்படியே கண்டு பிடிச்சாலும் திரும்பி வருவாளோ மாட்டாளோ நாகம் ... என்னைப் பார்த்துப் பேசுவாளோ, மாட்டளோ...?''

அதற்கு கால் விநாடி யோசித்துப் பின் ஒரு ஆழமான பெருமூச்சோடு சொன்னுள் நாகம்மாள்.

''அவ பேசின விதத்திலிருந்து கோபத்தை விட வருத்தமும், வெறுப்பும்தான் அதிகம் தெரிஞ்சது...''



''அதுதான் எனக்கும் பயமா இருக்கு. ஆழமாக ஒரு வெறுப்பு ஏற்பட்டதுன்னுல் மாறவே மாறுது நாகம் ...''

''அவன் போன வேகத்தைப் பார்த்தால் எனக்கும் அப்படித்தான் தோணறது...''

சிறிது நேரம் மௌனமாய்க் கன்னங்களில் கோடாக வழிந்ததைத் துடைத்த படி உட்கார்ந்திருந்த புவனேஸ்வரி சடாரென்று ஒருசந்தேகம் தோன்றக் கேட்டாள்:

''ஏன் நாகம் அவனுக்கு இதெல்லாம் எப்படித் தெரிஞ்சிருக்கும் ..?''

''இதோ வந்திருக்காரே ...அவர் பெயரைக் கேட்டுத்தான் அப்படிக் கோபப்பட்டான். இவரும் டில்லியிலிருந்துதானே வரார். இவரை அங்கே சந்திச்சானோ என்னவோ...''

''சந்திச்சானோ. என்னவோ..என்ன?நான் தான்சந்திக்கச்சொல்லியே அனுப்பினேன்..''

''நீதான் சந்திக்கச் சொன்னியா...? அடிப்பாவி, ஏன் அப்படிப் பண்ணினே?''

''இல்லே, குழந்தைக்கு எல்லா உதவியும் செய்வாரேன்னு பார்த்தேன். ஆனால் குழந்தைக்கிட்ட எதையும் சொல்லக் கூடாதுன்னு சத்தியம் வாங்கின்டேனே நாகம்...''

''நான் சொல்றேன்னு தப்பா நினைச்சுக்காதே புவனேஸ்வரி , இவனெல்லாம் நாலனுவிற்கு நாலு சத்தியம் பண்ணுவார்கள்...''

''எனக்கு அப்படித் தோணலே நாகம். எத்தனை வருஷமா பழகின்டு வரேன்...''

''அதுசரி. பழக்கத்துக்கு வருஷமா முக்கியம்..?அதுதான்நீ புரிஞ்சுண்டலட்சணம்!''

''சரி' போய்க்கேட்கறேன்...'' சரேலென்று எழுந்து கண்களைத்துடைத்துக் கொண்டு உள்ளுக்குள் ஒரு கேவல் எழ ஹாலுக்குப் போனாள்.

இரண்டாவது பெக் விஸ்கியை மிடறு மிடறாகச் சுவைத்துக் கொண்டிருந்த விஷ்ணு பிரசாத் அவளைப் பார்த்தும், புன்னகைத்து அருகில் கூப்பிட்டான்.

''வா, வந்து உட்காரு... உனக்கும் ஒரு பெக் கலக்கட்டுமா....?''

அடிவயிற்றிலிருந்து எழுந்தகுரோதத்தோடு அவனைப்பார்த்த படி ஒரு விநாடி பேசாமலே நின்றாள் அவள்.

''என்ன அப்படிப் பார்க்கறே...?'' என்று குழறினான் அவன்.

''கிருத்திகா கிட்டே நீங்க என்ன சொன்னீங்க...?''

''அது யார் கிருத்திகா..?''

''என் பொண்ணு. டில்லியில் உங்களைப் பார்க்க வந்தாளே...?''

''ஓ...அவளா...?வெரி ஸ்வீட் கர்ல். இன்ஃபாக்ட் உன்னை விட உம் பொண்ணு ரொம்ப அழகு புவனேஸ்வரி ...ஆனால் அவ உன் வழிக்கு வர மாட்டேன்னு பிடிவாதம் பிடிக்கிறாளே ...''

''அடப்பாவி....!''என்று முனகிக் சொண்டாள்.''ஆமாம், அவளை ஏதாவது கேட்டீங்களா...?''

''ஏதாவது கேட்கலே... வழக்கமா கேட்கிறதைத்தான் கேட்டேன். நீயும் உங்கம்மா மாதிரி என் மனசுக்கு சந்தோஷமா நடந்துண்டால் நல்லதுன்னு தெரியப்படுத்தினேன்...''— அவன் அந்த பெக்கை முடித்து, போதை சற்றே கூடுதலாக அடுத்த பெக்கைக் கலந்து கொண்டே வார்த்தைகள் உடைசலாக வெளியில் வரச்சொன்னான்.

''உன்னைப் பற்றிச் சொன்னதும் உம் பொண்ணுநம்பமாட்டேன்னிட்டா புவனேஸ்வரி... உன்னை ரொம்ப உயர்வா நினைச்சுட்டிருந்தா. நீ என்னவோ பெரிய சீதை மாதிரியும், சாவித்திரி மாதிரியும் நான்

---

## அடுத்த வாரம்

# கல்வி நிலையங்களா கொள்ளைக் கூடங்களா?



''முகமூடிக்காரன் இரவிலே கொள்ளையடிக்கிறான்; இவர்களோ முழு விலாசம் கொடுத்துப் பகலிலேயே கொள்ளை அடிக்கிறார்கள்!''

என்கிறார் சென்னை பல்கலைக் கழக சிண்டிகேட் உறுப்பினர் ஒருவர்

தான் பொய் சொல்ற மாதிரியும் பேசினுன். அப்புறம் நான் சொல்றதுதான் உண்மைன்னு நிரூபிக்க நாம் எடுத்துக்கிட்ட போட்டோவையெல்லாம் காட்டினேன், இதோ மாட்டிருக்கியே ..இந்த போட்டோவோட காப்பி ஒன்னு அனுப்பினியே அதையும் காட்டினேன்...''

''அடப்பாவி?'' என்று வாய் விட்டுக் கத்தினுன் அவன்.

''அதையெல்லாம் சொல்லமாட்டேன்னு நீ எனக்குப் பண்ணிக் கொடுத்த சத்தியத்தை மறந்துட்டியா...?''

''மறக்கலே. நான் எதையுமே மறக்க மாட்டேன் புவனு. ஆனுல் உன் பொண்ணை வழிக்குக் கொண்டு வர எனக்கு வேற மார்க்கம் தெரியலே. அப்படியும் கிளி சாமர்த்தியமா என்கிட்டேயிருந்து தப்பிச்சுகிட்டு பறந்துடுச்சு. அந்தப் பட்டாளத்துக்காரன் வீட்டுல போய் அடைக்கலமா உட்கார்ந்துட்டிருக்கு. நான் விடமாட்டேன், என் குணம்தான் உனக்குத் தெரியுமே... கூடிய சீக்கிரமே அவளை அந்த வீட்டிலிருந்து கடத்திட்டு வந்து...''

அவன் சொல்லி முடிப்பதற்கு முன் மேபாய் மீதிருந்த விஸ்கி பாட்டிலையும், கண்ணுடி டம்ளர்களையும் தூக்கித் தரையில் விசிறிப்போட்டு உடைத்தாள் புவனேஸ்வரி. அவன் அவளது வெறித்தனமான முகத்தையும், செய்கையையும் பார்த்து பயந்து போய் ''ஏய்..ஏய்... என்ன செய்யறே..?'' என்று பதறி எழுந்து நின்று தடுமாற,

''ஐ ஸே யு கெட் அவுட்...ஸ்கௌண்ட்ரல். முதல்ல என் வீட்டை விட்டு வெளியில் போடா... உன்னுடைய இந்தப் புத்தியை என் கிட்டேயே காட்டுவேன்னு நான் நினைக்கலே... என்ன நினைக்கறே என் பொண்ணைப்பற்றி...?அவளை அந்த வீட்டிலிருந்து கடத்திட்டு வரப் போறியா...? அப்படி எதற்காவது முயற்சி பண்ணினே, உன்னை உயிரோட விட மாட்டேன் ஜாக்கிரதை...''

''பு..வ...னு... வந்து... நான்...''

''இன்னொரு தரம் என்னைப் பெயர் சொல்லிக் கூப்பிடாதே.. போ வெளியே... இனி இந்த வீட்டுக்குள் நுழையாதே.. நாகம் டாக்ஸி கூட்டிண்டு வந்து இந்த ஆளை அதுல போட்டு ஓட்டலுக்கு அனுப்பு... நான் கொஞ்சம் வெளியில் போயிட்டு வரேன்... சீக்கிரம் முத்துவை அனுப்பி டாக்ஸி வரவழைத்துஇவனைஏற்றிஅனுப்பு.ஜாக்கிரதை'' அடுத்து எதற்கும் காத்திராமல் அவள் வெளியேறினதும் விஷ்ணுபிரசாத் அடிபட்ட நல்ல பாம்பு மாதிரி ஒரு சீற்றத்துடன் அப்படியே நின்று பின் சடாரென்று தள்ளாட்டத்துடன் வெளியில் போக—

நாகம் ஓடி வந்து டாக்ஸி... என்றுகேட்டாள்...

''எனக்கே பிடிக்கத் தெரியும். பிடிச்சுப்பேன்...''

காம்பவுண்டை விட்டு அவன் வெளியேறுவதை நிம்மதியுடனும் ஒரு வித பயத்துடனும் பார்த்து கொண்டு நின்றிருந்தாள் நாகம்மாள்..

(தொடரும்)







# வெற்றி எட்டு திக்கும் எட்ட கொட்டு முரசே...



4 லட்சம் டிக்கெட்களில் மட்டுமே

# ஆந்திர லஷ்மி

ரூ






கோடி

# ஒவ்வொரு டிக்கெட்டிலும்

# 21 வெற்றி வாய்ப்புகள்

குலுக்கல் 21-1-85

டிக்கெட் ரூ. 500/-

**மொத்தப் பரிசு**

| | |
|---|---|
| 40 முதல் பரிசுகள்: | ரூ. 10 லட்சம் வீதம் (குலுக்கல் கடைசி 4 எண்களில்) |
| 40 இரண்டாவது பரிசுகள்: | ரூ. 1 லட்சம் வீதம் (குலுக்கல் கடைசி 4 எண்களில்) |
| 400 மூன்றாவது பரிசுகள்: | 10 ஆயிரம் வீதம் (குலுக்கல் கடைசி 3 எண்களில்) |
| 4000 நாலாவது பரிசுகள்: | 1000/- வீதம் (குலுக்கல் கடைசி 2 எண்களில்) |
| 40,000 ஐந்தாவது பரிசுகள்: | 500/- வீதம் (குலுக்கல் கடைசி ஒரு எண்ணில்) |

**மினி குலுக்கல்**

20 முதல் பரிசுகள்
ரூ. 5 லட்சம் வீதம்
(குலுக்கலுக்கு ஒரு பரிசு வீதம்)
8000 இரண்டாவது பரிசுகள்
ரூ. 1000/- வீதம்
(குலுக்கலுக்கு 400 பரிசுகள் வீதம்)

**MINI DRAWS:**
1st on 18.12.84, 2nd on 19.12.84,
3rd on 20.12.84, 4th on 21.12.84,
5th on 25.12.84, 6th on 26.12.84,
7th on 27.12.84, 8th on 28.12.84,
9th on 1.1.85, 10th on 2.1.85,
11th on 3.1.85, 12th on 4.1.85,
13th on 8.1.85, 14th on 9.1.85,
15th on 10.1.85, 16th on 11.1.85,
17th on 15.1.85, 18th on 16.1.85,
19th on 17.1.85, 20th on 18.1.85

விற்பனையாளர்கள், ஏஜெண்ட்டுகள், ஸ்டாக்கிஸ்டுகளுக்கு வியக்கத்தக்க அதிருஷ்ட பரிசு-
30 அம்பாஸிடர் கார்
டிக்கெட்டுகள் எல்லா பெரிய லாட்டரி விற்பனையாளர்களிடம் கிடைக்கும்.





Convenor Raffle Committee D.D Hosp. Hyderabad in aid of developing Dr. C.D. Deshmukhi Cardio Vascular Institute and Research Centre.



ஆர்கனைசிங் ஏஜெண்ட் :
சந்திரா ஏஜென்ஸிஸ்
17, [illegible]
புதுடில்லி-110 001 போன் : 311351, 31120[illegible]

SUSAK ADS : 2003/84

சூப்பர் ஸ்டாக்கிஸ்ட் : மெஸர்ஸ் கே. ஏஜென்சீஸ்,
ரூம் நெ. 204 & 205, குப்தா லாட்ஜ், கே. ஜி. சர்க்கிள், பெங்களூர்-560 009

# கிழக்கு பெர்லின் கெடுபிடிகள்

## 10

சுவருக்கு அப்பாலுள்ள பெர்லினைப் பார்க்கப் போகிறோம் என்கிற ஆர்வம் எங்கள் குழுவில் அனைவரிடமும் நிரம்பியிருந்தது. பெர்லினில் எங்கள் நிகழ்ச்சிகளின் முடிவில் உச்சகட்ட சஸ்பென்ஸாகக் கிழக்கு பெர்லின் விஜயம் அறிவிக்கப்பட்டிருந்தது. கிழக்கு பெர்லின் பற்றிய எங்கள் உதவியாளர்களின் முன் ஜாக்கிரதைகளும், எச்சரிக்கைகளும், கெடுபிடிகளும் வேறு எங்கள் ஆர்வத்தை அதிகப்படுத்தியிருந்தன என்று சொல்லவேண்டும்.

கிழக்கு பெர்லினுக்குள்ளும், கிழக்கு ஜெர்மனிக்குள்ளும் மேற்கு ஜெர்மானியர் அல்லாத அந்நியர்கள் நுழைய ஒருவிதமான விதிமுறையும், மேற்கு ஜெர்மானியர் நுழைய வேறு இன்னும் கடுமையான விதிமுறைகளும் கடைப்பிடிக்கப்படுகிறது. மேற்கு ஜெர்மானியர்கள் விஸா கட்டணம் தவிரக் கட்டாயமாக இருபத்தைந்து மேற்கு ஜெர்மன் மார்க்குகளைக் கிழக்கு ஜெர்மன் மார்க்குகளாக மாற்றியாக வேண்டும்.

மேற்கு ஜெர்மனியரல்லாத அந்நியர்களுக்கும் விஸா கட்டணம் முதலியவை உண்டென்றாலும் கெடுபிடிகள் இல்லை. அவர்கள் பிரெடரிக் சார்லி செக் பாயிண்ட் வழியாகக் கிழக்கு பெர்லினுக்குள் நுழையலாம். இதற்கென்று மேற்கு பெர்லினிலிருந்து நிறைய டூரிஸ்ட் பஸ்கள் போகின்றன. இந்த பஸ்களில் ஒன்று எங்கள் கிழக்கு பெர்லின் பயணத்துக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. 'குர்ஃபுஸ்டெண்டாமம்' உடைந்த கோபுரத்தின் அருகே இருந்து இந்த டூரிஸ்ட் பஸ்கள் தினசரி பகலில் புறப்படுகின்றன. கிழக்கு பெர்லினைச் சுற்றிக் காண்பித்து விட்டு இரவு எட்டு மணிக்குள் திருப்பிக் கொண்டு வந்து விட்டு விடுகின்றன. பாஸ்போர்ட் சகிதம் நாங்கள் எட்டுப் பேரும் அழைத்துச் செல்லப்பட்டோம். அந்த மாடி பஸ்ஸில் மேலேயும் கீழேயுமாக ஐம்பது அறுபது பேர் அமரலாம்.

பஸ் மேற்கு பெர்லின் சாலைகளைக் கடந்து பிரெடரிக் — சார்லி — செக் பாயிண்ட் அருகே போய் நிற்கிறது. 'நீங்கள் மேற்கத்திய நேச நாடுகளின் எல்லையைக் கடந்து செல்கிறீர்கள்—' என்று







○ பின்னணியில் உடைந்த கோபுரம் குர்ஸ்புர்ஸ்டெண்டாம்



○ பிரிக்கப்படாத பெர்லின். 84 ஆண்டுகளுக்கு முன்

# ஏழு நாடுகளில் எட்டு வாரங்கள்

நா. பார்த்தசாரதி

அறிவிப்புகள் எழுதப்பட்டுள்ளன. சரியாக ஒரே ஒரு பஸ் நுழைய மட்டும் இடைவெளி விட்டுச் சாலை உள்ளே செல்கிறது. மிகவும் குறுகலான சாலை. கொஞ்சம் அஜாக்கிரதையாக ஓட்டினால் கூட பஸ் இடித்து விடும். வேகத்தைப் பற்றி நினைக்கவே முடியாது. பஸ் ஊர்ந்துதான் அந்த இடைவெளியைக் கடக்க முடியும். அவ்வளவு கச்சிதமான — குறுகல் வழி அது.

நேர் வழியிலிருந்து திரும்பி மேலே பரணிலும், கீழேயும் இயந்திரத் துப்பாக்கிகளுடன் ஆட்கள் காவல் புரியும் ஒரு கொட்டடியினுள் பஸ் போய் நிற்கிறது.

கையில் பாஸ்போர்ட் சகிதம் அதனுள் சொருகப் பட்டுள்ள சிறு தாளில் குறித்த வரிசை எண்படி கீழே இறங்கி நிற்கச் சொல்கிறார்கள். பஸ்ஸிலுள்ள அனைவரும் அவ்வாறு இறங்கி நின்றபின் — கிழக்கு ஜெர்மன் எல்லைக் காவல் படையினர் சிலர் பஸ்ஸிற்குள் ஏறிப் பரிசோதனை செய்கின்றனர். மற்றும் சிலர் கீழே இறங்கி நிற்கும் நம்மிடம் வந்து பாஸ்போர்ட்டைக் கேட்டு வாங்கிப், பாஸ்போர்ட்டிலுள்ள புகைப் படத்தையும் நம் முகத்தையும் மிகமிகக் கவனமாக ஒப்பிட்டுச் சரி பார்க்கின்றனர் இது மிக நிதானமாகவும் ஜாக்கிரதையாகவும் நடைபெறுகிறது. இதெல்லாம் நடக்கிற கெடுபிடியைக் கண்டு எவ்வளவு முயன்றாலும் தவிர்க்க முடியாமல் ஏதோ குற்றம் செய்துவிட்டுக் கைதிகளைப் போல் நின்று கொண்டிருக்கிறோமா என்று நமக்குள் ஒரு தாழ்வு மனப்பான்மை கூட வந்து விடுகிறது. 'துப்பாக்கி முனையில் நிறுத்தி வைத்துப் பரிசோதனை'— என்பார்களே அந்த அளவு கறாரான பரிசோதனை.

பிரதானமான கிழக்கு பெர்லின் வீதிக்குள் நுழைந்த பஸ் மறுபடி நிற்கிறது. ஒல்லியாக — முகத்தில் சிரிப்போ, துயரமோ போன்ற எந்த உணர்வும் தெரியாத ஒரு ஜெர்மன் பெண்மணி ஏறுகிறாள். கொஞ்ச வயது தான். "இவள் உங்கள் கிழக்கு பெர்லின் பயணத்துக்கான வழிகாட்டி. இவளிடம் உங்களை ஒப்படைக்கிறேன்"— என்று நமது பஸ்ஸின் ஓட்டுநர் அந்த வழிகாட்டியிடம் நம்மை அறிமுகப்படுத்தி ஒப்படைக்கிறார். அதற்குப் பிறகு அவர் நம்மிடம் பேசுவது நிற்கிறது. மறுபடி மேற்கு பெர்லின் எல்லைக்குள் நுழைந்தால் தான் பேசுவார் போலிருக்கிறது. பஸ்ஸிற்குள்ளேயே ஒலிபெருக்கி ஏற்பாடு இருந்தது.

தன் கையில் மைக்கை எடுத்துக் கொண்டு அந்தக் கிழக்கு ஜெர்மானியப் பெண்மணி ஆங்கிலத்தில் விளக்கங்களைத் தெளிவாகக் கூறத் தொடங்கினாள். பஸ் அதிக வேகமில்லாமல் கிழக்கு பெர்லின் வீதிகளில் போய்க் கொண்டிருந்தது.

ஏற்ற இறக்கமற்ற ஒரு சீரான குரலில் 'ஆன் யுவர் ரைட்சைட்' (உங்கள் வலது பக்கம்) ஆன் யுவர் லெஃப்ட் 'சைட்' (உங்கள் இடது பக்கம்) என்று இருபுறமும் வந்த கட்டிடங்களையும் காட்சிகளையும் விவரித்துச் சொன்னாள். வலது பக்கமும், இடது பக்கமும் சொல்வதற்கு விசேஷமாக எதுவும் இல்லாத போது — கிழக்கு ஜெர்மன் அரசின் முற்போக்குத் திட்டங்கள் பற்றியும், அதற்கான தீவிர ஏற்பாடுகள் பற்றியும் சொன்னார்.

இரண்டே இரண்டு இடங்களைத் தவிர வேறு எங்கேயும் பஸ்கள் நிறுத்தப்படவில்லை. கிழக்கு ஜெர்மனிக்காக சோவியத் யூனியன் கட்டித் தந்த நினைவுச் சின்னம் ஒன்றினருகே முதலில் பஸ் நிறுத்தப்பட்டது. அங்கும் கூட யாரும் எங்கும் விலகிச் சென்று விடாமல் 'வழிகாட்டியைப்' பின் தொடர்ந்து செல்லுமாறு எச்சரிக்கப்பட்டிருந்தோம். மரஞ்செடி கொடிகளும், பசும்புல்வெளிகளும், கால்வாய்

களுமாக இருந்த அந்த இயற்கையழகு மிக்க பகுதியில் ஒரே ஒரு செயற்கை அம்சம் எங்கள் வழிகாட்டியின் ஏற்ற இறக்கமற்ற — ஒலிப்பதிவு செய்தது போன்ற குரல்தான். "மற்ற எல்லா வழிகாட்டிகளும் சகஜமாகச் செய்வது போல் இந்தப் பெண் ஏன் சிரிக்க மாட்டேனென்கிறாள், ஏன் ஜோக் அடிக்க மாட்டேனென்கிறாள் — ஒரே மாதிரி உணர்ச்சி கலவாத வறட்டுக் குரலில் பேசுவதில் இவளுக்குப் போரடிக்காதா?" என்றெல்லாம் என்னுள் கேள்விகள் எழுந்தன.

நினைவுச் சின்னத்திற்கு அருகே இருந்த ஒரு ரெஸ்டாரெண்டில் பஸ் சிறிது நேரம் நின்றது. அந்த ரெஸ்டாரெண்டிலேயே கிழக்கு பெர்லின் பற்றிய பிக்சர் போஸ்ட் கார்டுகள் — அவற்றை அங்கிருந்தே போஸ்ட் செய்வதற்குத் தபால் தலைகள் எல்லாம் விற்கப்பட்டன. காப்பி அருந்தி விட்டுப் புகைப்படங்கள் — தபால் தலைகள் வாங்கும் எண்ணத்துடன் பலர் கீழிறங்கினார்கள். மேற்கு பெர்லினைச் சேர்ந்த ஜெர்மானியராகிய எங்கள் பஸ்ஸின் ஓட்டுநரும், கிழக்கு பெர்லினைச் சேர்ந்த ஜெர்மானியராகிய எங்கள் வழிகாட்டியும் பஸ்ஸிலேயே தங்கி விட்டனர். ரெஸ்டாரெண்டின் டாய்லெட்டில் அவசரமாக நுழைந்த எங்கள் கொரிய நண்பர் மறுபடி வெளியே வந்த போது முகப்பில் அமர்ந்திருந்த ரெஸ்டாரெண்ட் பணியாளாகிய ஒரு பருத்த ஜெர்மன் மூதாட்டி "ஒரு மார்க் எடு" — என்று சார்ஜ் செய்து வாங்கியதைப் பார்த்த போது — நாங்கள் டாய்லெட் முகப்பிலேயே வெற்றிகரமாகப் பின்வாங்கி விட்டோம்.

ரெஸ்டாரெண்டில் இருந்து முதலில் பஸ்ஸை நெருங்கிய நான் ஒரு கண்கொள்ளாக் காட்சியைப் பார்த்தேன். 'இவளுக்குச் சிரிக்கத் தெரியுமா? இவள் முகத்தில் மலர்ச்சியைப் பார்க்க முடியுமா?'— என்றெல்லாம் நான் சந்தேகப்பட்ட கிழக்கு பெர்லின் வழிகாட்டி யுவதியும் மேற்கு பெர்லின் பஸ்ஸின் டிரைவரும் அருகருகே நின்று புகைத்தபடி சிரித்துப் பேசிக் கொண்டிருந்தார்கள். மனித உறவுகளைச் சுவர்களும் வேலிகளும், கெடுபிடிகளும், சட்ட திட்டங்களும், தடுக்க முடியுமா என்ற சந்தேகம் அந்த ஒரு கணத்தில் தீவிரமாக என்னுள் ஏற்பட்டது.

அரை மணி கழித்து மறுபடி பஸ் புறப்பட்டது. மறுபடியும் 'உங்கள் வலது பக்கம் — இடது பக்கம்' என்கிற ஒரேவிதமான அச்சில் வார்த்தது போன்ற குரல். கிழக்கு பெர்லினின் புகழ்பெற்ற மியூஸியம் ஒன்றின் அருகே போய்ப் பஸ் நிற்கிறது. எல்லோரும் இறங்குகிறோர்கள். சுற்றுப்பயணத்தில் கடைசி இடம் அது. கோச்சில் இருந்து இறங்கிப் போனவர்களைத் தவிர அந்தப் பிரம்மாண்டமான மியூஸியத்தில் வேறு கூட்டமே இல்லை.



**உலகிலேயே மிக அதிகமான பற்களை உடையது நத்தைதான்!**

**நத்தைக்கு மிகச் சிறியதாக 1800 பற்கள் உள்ளன.**

**'வாயெல்லாம் பல்' என்பது இது தானோ? - லலிதா செல்லப்பா**

மறுபடி 'செக் பாயிண்ட்' சார்லியில் நுழையுமுன்புள்ள சோதனைக் கொட்டடி. பஸ்ஸிலிருந்து அனைவரும் கீழே இறங்குகிறோம். பாஸ்போர்ட் — முகங்களை ஒப்பிட்டுத் தீவிரமான சோதனை. பஸ்ஸிற்குள்ளும், கீழே பஸ்ஸின் 'சாஸியிலும்' கூடக் கண்காணிப்பு. நுழையும் போதிருந்ததை விட இப்போது தீவிரம் அதிகம். காரணம் எப்போதோ ஒரு சமயம் இது மாதிரி மே. பெர்லினிலிருந்து வந்து திரும்பிய பஸ்களில் ஒளிந்து சிலர் தப்பிவிட்டார்களாம்.

மீண்டும் பஸ் மேற்கு பெர்லின் எல்லைக்குள் வந்ததும் எங்கள் ஓட்டுநர் கேலிக் குரலில் மறுபடி 'ஆன் யுவர் ரைட் சைட் — ஆன் யுவர் லெஃப்ட் சைட்' என்று கூறிப் புன்முறுவல் பூத்தது இரசிக்கும்படி இருந்தது.

ஒருவிதமாக எங்கள் கிழக்கு பெர்லின் சுற்றுப் பயணம் முடிந்தது. பெரும்பாலும் பஸ்ஸில் அமர்ந்தபடியே சுற்றி முடிந்த அந்தப் பயணத்தில் இரண்டு இடங்களில் மட்டுமே கீழே இறங்கிச் சுற்றிப் பார்க்க முடிந்திருந்தது. மறுநாள் நாங்கள் பெர்லினிலிருந்து மேற்கு ஜெர்மனியின் மற்றொரு நகரமான 'ஸ்டுட்கார்ட்'டிற்குப் புறப்படுவதற்குத் திட்டமிட்டிருந்தோம்.

(தொடரும்)

## இந்தியாவின் இந்திரா

# நேசத் தந்தையான தேசத் தந்தை

### 6

''பாபுஜி, உங்களைப் பார்க்க வேண்டுமாம், வரச் சொன்னார்.''

கையில் இருந்த வேலையை அப்படியே போட்டு விட்டுக் கிளம்பினார் இந்திரா. காரில் ஏறப் போகும் போது தோட்டக்காரன் கையை நீட்டினான். அப்போதுதான் பறித்து அழகாகத் தொடுக்கப்பட்ட மல்லிகைச் சரம்.

''அம்மா, நானும் வர்ரேன்'' திரும்பிப் பார்த்தார் இந்திரா. மூன்றரை வயது ராஜீவ். பிள்ளையும் அம்மாவுமாக் காரில் ஏறிக் . கொண்டார்கள். பிர்லா மாளிகைக்குக் கார் விரைந்தது.

இந்தியா முழுக்க காந்தியை தேசத் தந்தை என்று கும்பிட்டது. என்றாலும் இந்திராவிற்குக் காந்தி சொந்தத் தந்தை போல. சின்ன வயதில் அப்பாவுடன் அதிகம் பேச முடிந்ததில்லை. அவர் வீட்டில் இருந்த நேரம் வெகு சொற்பம். ''அன்புள்ள பிரியதர்சினி, இன்று உனக்குப் பிறந்த நாள். இந்த நாளில் ஏராளமான பரிசுகள் நான் உனக்குத் தருவது வழக்கம். ஆனால் சிறையில் இருக்கும் இந்தத் தந்தை இம்முறை என்ன தர இயலும்? என் ஆசிகள்'' என்று கடிதமோ, தந்தியோ அவ்வப்போது அப்பாவிடம் இருந்து கிடைத்துக் கொண்டிருந்த பருவம் அது. காந்தியிடம் நெருங்க முடிந்தது. பூனா பள்ளியில் படிக்கும் போது காந்தி பக்கத்தில் இருந்த சிறையில் இருந்தார். வாரா வாரம் போய்ப் பார்க்கிற வழக்கம். அப்பாவைப் பார்க்க முடியாத ஏக்கத்தில் பேசுகிற பிரியம். எல்லாம் இரண்டு பேருக்கும் இடையில் ஏற்படுத்தி இருந்தது ஒரு நெருக்கம். பெரிய பெரிய தலைவர்கள் பிரச்சினைகள் பற்றிப் பேச வருவார்கள். தத்துவம் கேட்டுச் சிந்தனை தெளிய வருவார்கள். பேட்டி கேட்டு பத்திரிகைக்காரர்கள் கூடுவார்கள். இவர்களுக்கு நடுவில் காந்தி முன்னர் இந்திரா வைப்பது எளிய குழந்தைக் கவலைகள். சின்னச் சின்ன துக்கங்கள். அர்த்தம் இல்லாத கோபங்கள். இவற்றைக் கேட்கக் கேட்கக் காந்திக்குச் சிரிப்பாய் இருக்கும். பெரிய டென்ஷன்களுக்கு நடுவில் இயல்பாய்க் கிடைத்த ஓய்வாய்த் தோன்றும்.



குழந்தை போல் வைத்த பாசம் குறைவில்லாமல் வளர்ந்து கொண்டு வந்தது. காரியம், காரியம் என்று மூழ்கி விடுகிற அப்பாவிடம் பேச முடியாததை, காந்தியிடம் பேச முடிந்தது. ஆனால் சிந்திக்கத் தெரிந்த பெரிய பெண்ணாக வளர்ந்த பின்னால் அவருடைய கொள்கைகளை ஒப்புக்கொள்ள முடியவில்லை. அஹிம்சை என்பது பலவீனம், கைத்தொழிலை மாத்திரமே நம்பியிருக்க வேண்டும் என்பது விஞ்ஞானத்திற்கு எதிரானது என்றெல்லாம் தோன்றியது. பாபுஜியின் கொள்கைகள் பழமையானவை என்று தோன்றியது. இவற்றைப் பற்றிக் காந்தியுடன் காரசாரமாக விவாதம் செய்ததுண்டு. அதை காந்தி சீரியஸ்ஸாக எடுத்துக் கொண்டதில்லை. அவற்றிற்குப் பதிலும் சொன்னதும் இல்லை. 'சின்னப் பெண்' என்று சிரித்துக் கொண்டு சும்மா இருந்து விடுவார்.

காந்தியின் வழிமுறைகள் மீது கேள்விகள் இருந்தன. கூடவே அவர் காலால் இட்ட வேலையைத் தலையால் செய்கிற மரியாதை. சஞ்சய் பிறந்த எட்டாம் மாதம். பிரிவினையால் ஏற்பட்ட பிரளயத்தில் தில்லி கலைந்து கிடந்தது. இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இடையே ஏற்பட்ட ரகளையில் இரண்டு பேருமே காயப்பட்டிருந்தனர். இதை ஒழுங்கு பண்ணுகிற வேலையை இந்திராவிடம் ஒப்படைத்தார் காந்தி. ''ஏகப்பட்ட பேரிடம் சொல்லிப் பார்த்து விட்டேன். யாரும் செய்கிற வழியாய் இல்லை. ஆபத்தான வேலை. அதனால்

தயங்குகிறார்கள். ஆனால் நீதான் செய்தாக வேண்டும்'' என்று சொன்னார்.

கஷ்டப்பட்ட பிரசவத்தில் களைத்துப் போன பச்சை உடம்பு. அனிமியா. அதன் காரணமாய்ச் சோர்வு. இதற்கிடையில் கைக்குழந்தை. இன்னுமொன்று சவலைப் பிள்ளை. நினைத்த நேரத்திற்குப் போய் இஷ்டப்பட்ட போது எழுந்து வந்து விடக் கூடிய சங்கீதக் கச்சேரி போல் இல்லை சமூக சேவை. இறங்கி விட்டால் எல்லா நேரத்தையும் கேட்கும். நகக்கண்ணில் உட்கார்ந்து செய்கிற நாசூக்கான வேலை இல்லை. கஷ்டமான வேலை மாத்திரம் அல்ல. ஆபத்தான வேலை. கோபம் கண்ணை மறைத்திருக்கிற நேரம். மனிதர்களுக்கு மதம் பிடித்து விட்ட நேரம். ஒரு மனிதனுக்குச் செய்கிற உதவியை அவனது மதத்திற்கு அளிக்கப்படும் ஆதரவு என அர்த்தம் கொண்டு ஆத்திரப்படுகிற நேரம். 'முனுக்' கென்று பொங்குகிற முன் கோபத்தில் உயிரைக் கொன்று விடலாம். உடம்பைக் காயப்படுத்தி விடலாம்.

ஆனால் கட்டளையிடுபவர் காந்தி. தேசத் தந்தை மட்டுமல்ல. நேசத் தந்தையும் கூட. மறு பேச்சுப் பேசாமல் கொடுத்த வேலையை ஏற்றுக் கொண்டார் இந்திரா. பழைய தில்லியில் சந்து சந்தாகப் போய் உழைத்தார். பன்னிரண்டு மணி நேர வேலை. மூன்று மாத உழைப்பு. அன்றாடம் போய்க் காந்தியைப் பார்க்க அவகாசம் இராது. ஆனால் நடந்த வேலை பற்றி நாள்தோறும் பாபுஜிக்குக் குறிப்புப் போகும். வேலைப் பளு தாங்காமல் ஒருநாள் சேரிக்கு நடுவில் மூர்ச்சைப் போட்டு விழுந்தார் இந்திரா. அன்றோடு அவருக்குக் கொடுத்த வேலையில் இருந்து விலக்குக் கொடுத்தார் காந்தி. 'புருஷன் வீட்டிற்குப் போய் இளைப்பாறடி பெண்ணே!' என்று லக்னௌவிற்குத் திருப்பி அனுப்பித்தார்.

மறுபடியும் மகாத்மா இன்று அழைத்திருக்கிறார். எதற்கு? நெஞ்சில் கேள்வி புரள பிர்லா மாளிகைக்குள் நுழைந்தார் பிரியதர்சினி. ஓய்வாக அமர்ந்திருந்தார் காந்தி.

''வா இந்து வா!'' என்று வாய் நிறையச் சிரிப்பு வழிய வரவேற்றார்.

''கூப்பிட்டீங்களாமே பாபு?''

''என்னவோ உன்னைப் பார்க்க வேண்டும் என்று தோன்றியது. எத்தனை நாளாயிற்று உன்னைப் பார்த்து!''

''இப்படி ஓய்வாக என்றைக்கு நீங்கள் உட்கார்ந்து இருக்கிறீர்கள்? எதையாவது செய்து கொண்டிருப்பீர்கள். யாரோடாவது பேசிக் கொண்டிருப்பீர்கள். ஏதாவது செய்து கொண்டிருப்பீர்கள்.''

''இனிமேல் சும்மா இருக்க வேண்டியது தான் இந்து.''

''என்ன அப்படிச் சொல்கிறீர்கள்?''

''ஆமாம். சுதந்திரம் வந்து விட்டது. அரசாங்கம் புதிதாய் அமைந்து விட்டது. அவர்களுக்கு அநேக தலைவலி. அதற்கு நடுவில் நாம் போய் மூக்கை நுழைத்தால் கிழவனைத் தூக்கி மூலையில் போடு என்று சொல்ல மாட்டார்களா என்ன?''

• காரியம், காரியம் என்று மூழ்கி விடுகிற அப்பாவிடம் பேச முடியாததை காந்தியிடம் பேச முடிந்தது.



''அப்படியெல்லாம் இந்த தேசம் உங்களை ஒழித்து விடாது பாபுஜி.''

''அந்தப் பேச்சை விடு. இன்றைக்கு என்னவோ என் பெண்ணைப் பார்க்க வேண்டும் பேச வேண்டும் போலிருந்தது. குழந்தை எப்படி இருக்கிறான்?''

''குழந்தையாகத்தான். சமத்து. ஆனால் சவலை. அம்மாவைப் பிரிந்து அரை நிமிஷம் இருக்க மாட்டான்.''

தோட்டக்காரன் கொடுத்த மல்லிகைச் சரத்தை வைத்து விளையாடிக் கொண்டிருந்தான் ராஜீவ். படுக்கையில் சாய்ந்தபடி நீட்டிக் கொண்டிருந்த பாபுஜியின் கணுக்காலில் கொலுசு போல் சுற்றி 'அழகு' பார்த்தான். கட்டைவிரலில் மாட்டி ஊசலாட்டினான். காதின் மேல் சுற்றி கைக்கொட்டிச் சிரித்தான். எல்லா விளையாட்டிற்கும் ஈடு கொடுத்துக் கொண்டு சிரித்தபடி இருந்தார் காந்தி. எத்தனையோ சின்னச் சின்ன விஷயங்கள் பற்றிப் பேசினார். ஜோக்கடித்தார்.

''ஆசிரமப் பெண்களை நேற்று சினிமாவிற்குப் போகக் கூடாது என்று சொன்னீர்களாமே.''

''அந்தப் படம் சுத்த மோசம்மா!''

''அதெப்படி உங்களுக்குத் தெரியும். நீங்கள் பார்த்தீர்களா?''

''பார்க்கவில்லை. ஆனால் தெரியும்.''

''அதுதான் எப்படி என்கிறேன்?''

''அந்தப் படத்தை எடுத்தவரை எனக்குத் தெரியும்.''

''அவர் மோசமானவராகவே இருக்கட்டும். அதற்காக அவர் படங்கள் எல்லாம் குப்பையாகத்தான் இருக்க வேண்டும் என்று எப்படிச் சொல்ல முடியும்?''

''எண்ணங்கள் தான் மனிதர்களை உருவாக்குகிறது இந்து. ஒரு மனிதனின் எண்ணங்கள், சின்னதாகவோ, எண்ணங்கள், சின்னதாகவோ, பெரிதாகவோ அவனுடைய செயலில் தன்னை வெளிக் காண்பித்துக் கொண்டுதான் இருக்கும். அதனால் தான் நம் ஒவ்வொருவருடைய எண்ணங்களும் தூய்மையாக இருக்க வேண்டும் என்று நான் ஆசைப்படுகிறேன்.''

''நீங்கள் சொல்வதென்னவோ வாஸ்தவம்தான் பாபுஜி. நேற்று நாங்கள் அந்தப் படம் பார்த்தோம். மகா மோசம்.''

''பின்னே, அதற்கு இவ்வளவு பரிந்து கொண்டு வந்தாயே!''

''பரிந்து கொண்டு பேசவில்லை. நீங்கள் எப்படி உட்கார்ந்த இடத்தில் இருந்தே எல்லாவற்றையும் துல்லியமாக எடை போடுகிறீர்கள் என்று தெரிந்து கொள்ளத் தான் வாயைக் கிளறினேன்.''

''பொல்லாத பெண் நீ!'' பொக்கை வாயைத் திறந்து சிரித்தார் காந்தி. ''மனிதர்களைப் புரிந்து கொண்டால் பாதி விஷயங்கள் தானே சரியாகப் போகும்.''

மனிதர்களைப் புரிந்து கொள்வது எளிதான காரியமா? அடுத்த நாளே அவர், பிரார்த்தனைக் கூடத்திற்குப் போகிற வழியில், கும்பிடு போட்டவன் கையாலேயே கொல்லப்பட்டார்.

இந்திராவின் தலையில் இடி போல் இறங்கியது செய்தி. நேற்றைக்கு நெடுநேரம் பேசிக் கொண்டிருந்தவர் இன்றைக்கு இல்லை என்பதை நம்ப முடியவில்லை. முதல்நாள் பேசிய பேச்சுக்கள் நினைவில் ஒலித்தன. ''நடுக்காட்டில் விட்டுவிட்டுப் போய்விட்டீர்களே பாபு'' என்று வெகு நாட்களுக்குப் பின் வாய்விட்டு அழுதார் இந்திரா.

(தொடரும்)



# நேரில் பார்த்த ஞானரிஷி



✕ எஸ். எஸ். மாரிசாமி

**ராஜாஜி அமரரானதினம் டிசம்பர் 25ல். தமிழக அரசும் பல நிறுவனங்களும் ராஜாஜி நினைவுநாளை விமரிசையாகக் கொண்டாடியுள்ளன. அவருடன் நெருங்கிப் பழகிய திரு எஸ். எஸ். மாரிசாமி பல அரிய நிகழ்ச்சிகளை இங்கே நினைவு கூருகிறார்.**

ரிஷிகள், ஞானிகள் என்றெல்லாம் கேள்விப்பட்டிருக்கிறோம். யாரையும் நேரில் பார்த்ததில்லை. ராஜாஜி அவர்களை நினைத்தால்வேதகாலத்துத்தவ முனிவர்கள்தான் நினைவுக்கு வருகிறார்கள். கீதை வலியுறுத்தும் பற்றற்ற தன்மையைத் தம்முடைய ஒவ்வொரு நடவடிக்கையிலும் பிரதிபலித்தவர் ராஜாஜி. இந்தக் காரியம் சொன்னால் நடக்குமா, கேட்டுக் கொள்வார்களா என்றெல்லாம் அவர் சிந்தனை பண்ண மாட்டார். சொல்ல வேண்டியது நம்முடைய கடமை என்ற எண்ணத்தோடு பட்டென்று சொல்லி விடுவார். எதையும் பேசிவிடுவது சுலபமானது. ராஜாஜி தம்மால் கடைப்பிடிக்க முடியாத எதையும் பேசியதில்லை. தூய்மையான, எளிய, தியாக உணர்வும், தெய்வாம்சமும் பொருந்திய வாழ்க்கை ராஜாஜி அவர்களுடையது.

## வந்து சேர எத்தனை நிமிஷம்...?

அகில இந்தியப் புகழ்பெற்ற வழக்கறிஞர் ஒருவர் ராஜாஜி அவர்களைச் சந்தித்துப் பேச விரும்பித் தொலைபேசியில் தொடர்பு கொண்டார். டெலிபோன் ராஜாஜிக்கு வந்த நேரம் அவர் ஓய்வு எடுத்துக் கொள்கிற நேரம்.

போனை எடுத்தவர் தயக்கத்தோடு, ராஜாஜியை அணுகி, விஷயத்தைச் சொல்லி ''அவரை வரச் சொல்லலாமா?'' என்று கேட்டார்.

''இருபது நிமிஷத்தில் பேட்டியை முடித்துக் கொள்வதானால் அவர் வரலாமே'' என்றார் ராஜாஜி. இந்தச் செய்தியை வழக்கறிஞருக்கு போனில் சொல்லப் போனார் உதவியாளர்.

''முதலில் இந்தவீடு எங்கே இருக்கிறது. வழி தெரிந்த டிரைவர் இருக்கிறாரா, எவ்வளவு நேரத்தில் இங்கு அவரால் வரமுடியும் எனக் கேட்டுக் கொண்டு அப்புறம், இருபது நிமிஷ அவகாசம் கொடுங்கள்'' என்றார் ராஜாஜி.

## அரசியல் வேறு மனிதாபிமானம் வேறு...

ஒரு சமயம் எதிலும் படபடப்பாக, கடுமையாக அபிப்பிராயம் சொல்லக்கூடிய நண்பர் ஒருவர் ராஜாஜியிடம்வந்து பேசிக் கொண்டிருந்தார். இந்தியாவுக்கும், சீனாவுக்கும் நடைபெற்றுக் கொண்டிருந்த போரைப் பற்றியும், அதில் இந்தியாவின் நிலைபற்றியும் ஆவேசமாகப் பேசிக் கொண்டே போனார் அந்த நண்பர். ''நமது துருப்புகள் செமத்தியாக வாங்கிக் கட்டிக் கொள்கிறார்கள்.. இவ்வளவுக்கும் இந்தக் கிருஷ்ணமேனன் தான் காரணம்'' என்றெல்லாம் அவர் சாடினார்.

நண்பரின் பேச்சும், ஆவேசமும் ராஜாஜிக்கு ரசிக்கவில்லை. ஆனால் அதை அவர்

வெளியில் காட்டிக் கொள்ளவும் இல்லை. நண்பர் எழுந்து போனார். அடுத்த நிமிடமே நம்முடைய இராணுவ வீரர்களின் மீது பரிவையும், இரக்கத்தையும் காட்டி, படிப்பவர்கள் கண் கலங்கி நெகிழ்ந்து போகிற மாதிரி, தேச பக்தியைக் கிளர்ந்தெழப் பண்ணுகிற ஒரு கட்டுரையைமடமடவென்று எழுதினார் ராஜாஜி.

கட்டுரையை, ஆவேச விமர்சன நண்பரும் படித்துப் பார்த்துக் தம்முடைய கூற்றுக்கு வெட்கியிருப்பார். அரசியல் வேறு, மனிதாபிமானம் வேறு என்பதை நன்கு அறிந்திருந்தவர் ராஜாஜி.

### ஆங்கிலத்துக்குப் புதிய வார்த்தை...

அணு ஆயுதங்கள் ஒழிப்புப்பற்றி கென்னடியுடன் பேசிவிட்டு ராஜாஜி நியூயார்க் வருகிறார்: பத்திரிகையாளர்கள் சூழ்ந்து கொண்டு, கேள்விக்கணைகளை அள்ளி வீசுகிறார்கள்.

''பயணம் வெற்றிதானா?''

ராஜாஜியின் பதில்: ''Flower Full''

நிருபர்கள் திகைக்கிறார்கள்.

''Fruit Full (நற்பலன் கிட்டியது) என்பதைத்தான் நீங்கள் கேட்டுப் பழகியிருக்கிறீர்கள். அதற்கும் முன்னால் பூ பூப்பதையும் பார்த்திருப்பீர்களே?'' என்று கேட்டார் ராஜாஜி.

நிருபர்களிடையே சிரிப்பொலி அலைமோதியது. ''ஆங்கில மொழிக்கு ராஜாஜி ஓர் அற்புதமான புதிய சொல்லைத் தந்துவிட்டார்'' என்று 'நியூயார்க் டைம்ஸ்' பாராட்டி எழுதியது.

---

அண்மையில், அங்காரா மருத்துவ மனை ஒன்றில் இருபத்தைந்து வயதான துருக்கிய இளைஞர் ஒருவர் அனுமதிக்கப்பட்டார். சிறுநீரகத்தில் கல்லடைப்பு என்று சோதனை பண்ணினார்கள். எக்ஸ்ரேயில் பார்த்தால் மனிதருக்கு நான்கு சிறு நீரகங்கள் இருப்பது தெரிந்தது. ரொம்பவும் தாராள மனசாக இருந்தால் மூன்று பேருக்கு இவர் ஒருவரே கிட்னி தானம் பண்ணலாமோ என்னவோ. -யெஸ்'



---

### மூணு பாயிண்ட் போதுமே!

ஒரு வழக்குக்காக ராஜாஜியின் ஆலோசனை பெற வந்திருந்தார்கள். எட்டு அல்லது ஒன்பது பாயிண்டுகளை எடுத்துக் கொண்டு விவாதிக்க ஆலோசனை கேட்டார்கள்.

அவற்றில் மூன்றே பாயிண்டுகளை மட்டும் தான் ராஜாஜி ஏற்றுக் கொண்டார். வழக்கறிஞருக்கு மிகவும் ஏமாற்றமாகப் போய் விட்டது. இவ்வளவு கஷ்டப்பட்டு ஆராய்ந்து கொண்டுவந்த பாயிண்டுகளை ராஜாஜி இப்படி ஒதுக்கித் தள்ளி விட்டாரே என்று ஆதங்கப்பட்டார்.

இதைக்கவனித்துவிட்ட ராஜாஜி சொன்னார்: ''அதிகம் பாயிண்டுகளை எடுத்துச் சொன்னால் ஜட்ஜுகள் குழம்பிப் போவார்கள். சட்டென்று தைக்கிற மாதிரி மூன்றே பாயிண்டுகள் போதும்''

வக்கீல் உட்பட எல்லோருமே சிரித்தார்கள். அந்த மூன்று பாயிண்டுகளிலேயே வழக்கும் வெற்றி பெற்றது.

### கல்லாய் இருப்பார் வெண்ணெயாய் உருகுவார்

இது, ராஜாஜியிடம் சார்டிரைவராக இருந்த ஒருமுஸ்லீம்அன்பர் சொன்ன தகவல்.

சேலத்தில் ஒரு கொலை வழக்கு. ராஜாஜியும் தம்மிடம் வந்த வழக்குக்கு ஆயிரம், ரூபாய் தரவேண்டும் என்று கட்சிக்காரரிடம் கேட்டார்.

அவரிடம் ஆயிரத்துக்கு இருபது ரூபாய் குறைவாக இருந்தது. ராஜாஜி ஏற்கவில்லை. அப்புறம், அந்தக் கட்சிக்காரர் தம்மிடம் சாப்பாட்டுக்கும், பஸ்செலவுக்கும் என்று வைத்திருந்தவற்றையும் சேர்த்து ஆயிரமாகத் தந்துவிட்டார்.

ராஜாஜி, தம்முடைய கட்சிக்காரரின் கையில் சல்லிக்காசு கூட இல்லை என்பதைப் புரிந்து கொண்டுவிட்டார். அதற்காக பீஸை குறைத்துக் சொன்ன முடியுமா என்ன? ஒரு காரியம் செய்தார்.

''வழக்கு சம்பந்தமாக ஏதாவது பேச வேண்டியிருக்கும். இங்கேயே என்னுடன் தங்கிக் கொள்ளுங்கள்'' என்று சொல்லி விட்டார்.

சாப்பாடு, தங்க இடம் எல்லாம் ராஜாஜி வீட்டில். பத்துநாள் சென்று பஸ் செலவுக்கும் தந்து அவரை அனுப்பி வைத்தார் ராஜாஜி.

அந்த முஸ்லீம் நண்பர்சொன்னவார்த்தை: ''கல்லு கணக்கா இருப்பாருங்க, ஆனா மனசு மட்டும் வெண்ணெய் மாதிரி.''

தொகுப்பு: வெஸ்பால்

# நேரம் நல்ல நேரம்



■ ''முதல்வர் எம்.ஜி.ஆர் கொடுத்த அறிவுரை''




**25.** நல்லாலம் காசிதாசன், மேல்கொவளவேடு. வ. ஆ.
எதிர்பார்ப்புகள் ஏமாற்றம் அளிக்கும் போது, ஒருவனது மனநிலை எப்படி இருக்கும் என்பதைப் படம் பிடியுங்களேன்?

படம் பிடிக்கணும்னு காமிரா வேணும். ரேடியோவில் செய்யக் கூடிய காரியமில்லே அது. ஆக... நீங்கள் ரேடியோவில படம் பிடிக்கச் சொல்றது நியாயம்னு எனக்குத் தோணலே. பல படங்கள்ள வந்திருக்கும் நீங்க சொல்ற அந்தக் காட்சி... ஸோ, அதுல சிலது பார்த்துச் சந்தோஷப்பட்டுக்குங்க. இப்போதைக்கு ரேடியோவில படம் பிடிக்க முடியாது. வாயாலதான் பேச முடியும். மன்னிக்க

**26.** இரா. பழம், எம். ஏ., மயிலாடுதுறை.
புகழேணியின் உச்சியை அடைந்து விட்ட தங்களுக்கு எப்போதாவது கர்வம் ஏற்பட்டது உண்டா? நம்மைவிடச் சிறந்தவர் யாருமில்லை என்ற எண்ணம் எப்போதாவது தோன்றியதுண்டா?

முதல் பகுதி உங்க பேர் மாதிரியே இனிக்குது—பழமா. அதாவது எல்லாம் சாதித்து-விட்டேன்கிறது மாதிரி சொல்லியிருக்கீங்க; எனக்கு அதுல பெரிய சந்தேகமும் இருக்கு! இந்த கர்வம்ங்கற விஷயம் எல்லா நிலையிலும் ஒரு கலைஞனைத் தொத்திக் கொள்



ளும் ஜலதோஷம் மாதிரி ஒரு வியாதி. இதுக்குக் கியூரே கிடையாது. இதுக்கு யாரும் மருந்து கண்டுபிடிக்கவில்லை. தும்மி, இருமி கர்சீப் எல்லாம் அசிங்கப்படுத்தி அதுவாகப் போகும் வரை அதை ஒண்ணும் பண்ண முடியாது. மூச்சுவிட முடியாமல் திணறலை ஏற்படுத்தும் ஒரு வியாதி இந்த கர்வம். அது எல்லாக் கலைஞர்களுக்கும் வரும். அதற்கு நான் விதி விலக்கு அல்ல. ஆனால் என்னுடைய கர்வத்தை அடிக்கடி போக்குவதற்கு, என்னைச் சுற்றி என்னைவிடத் திறமையுள்ள கலைஞர்கள் பல பேர் இருப்பதனால் அதைப் பார்த்து ஒடுங்கும் நிலையை எனக்கு ஏற்படுத்தியிருக்கிறது தமிழகம். அதனால எனக்குக் கர்வம் அவ்வளவு சாமான்யமா, தமிழ் நாட்டுல இருக்கற வரைக்கும் வராது...ஓரளவுக்குக் கர்வம் இருக்கணும். அதாவது ஜலதோஷம் கூடத் தேவைதான் இந்தக் கபத்தை எல்லாம் நீக்கறதுக்கு. அந்த மாதிரி திறமையைக் கொண்டு வரதுக்குக் கர்வமும்தேவை தான். அதை கர்வம்னு கூடச் சொல்லக் கூடாது தன்னம்பிக்கைன்னுதான் சொல்லணும். அந்தத் தன்னம்பிக்கை— 'என்னால செய்யமுடியும்.. அவரை விடச் சிறப்பாகச் செய்யமுடியும்' — என்னும் தன்னம்பிக்கை வளர்ச்சிக்குத் தேவைதான். கர்வம் என்பது, 'யார் எப்படிப் போனால் என்ன? என்னை அடிக்க ஆளில்லை' என்று நினைத்துக் கொள்வது...அந்த கர்வமும் கலைஞனுக்கு ஒரு நிலையில் எச்சரிக்கையாக இல்லாது போனால் வந்து விடும் என்றுதான் நான் சொன்னேன்.

**27.** எஸ். ரவி, பல்லாவரம்.
நீங்கள் மிகவும் கஷ்டப்பட்டு நடித்து, இந்தப் படம் நிச்சயமாக 100 நாட்களுக்கு மேல் ஓடும் என்று நீங்கள் மிகப் பெரிய மனக்கோட்டை கட்டித் தோல்வியைத் தழுவிய படம் எது? அசிரத்தையாக நடித்து இந்தப் படம் எங்கே ஓடும் என்று நினைத்து நன்றாக ஓடி, நல்ல வசூலும் தந்த படம் எது? அதன் தன்மைகளையும் பின்னணியையும் நீங்கள் அலசிப் பார்த்தது உண்டா?

அதாவது.. இது மாதிரி சொல்லும் பொழுது, 'ராஜ பார்வை'யை முதலில் ஆரம்பித்தபோது இது ஒரு பெரிய ரெக்கார்ட் பிரேக்கர் ஆக இருக்கும் என்ற நம்பிக்கையில் எடுக்கலே. கண்டிப்பா ஃபெயில் ஆகாது, நல்ல படமாகவும் அமையும் என்ற ஆசையில் எடுத்தது. அந்த ஆசையில் சில நிராகரிப்புக்கள் ரசிகர்கள் மத்தியிலிருந்து எனக்கு வந்தது. இந்தப் படம் சரியில்லை என்று நினைத்து எந்தப் படத்தையும் நான் செய்யறது கிடையாது. இது தமிழக முதல்



**கல்யாணப் பத்திரிகையில் பூஜாரி**

அவர்: ''என்னங்க, உங்க மகள் கல்யாணப் பத்திரிகையில் நல்வரவை எதிர்பார்க்கும் ''ஜனார்த்தன் பூஜாரி''ன்னு அச்சிட்டிருக்கீங்க?''
இவர்: ''பேங்க் லோனை வச்சுத் தாங்க இந்தக் கல்யாணத்தையே என்னால் நடத்த முடிஞ்சுது!''

—உ. ராஜாஜி.

வர் திரு எம்.ஜி.ஆர். கொடுத்த அறிவுரை. ஒரு முறை நான் ஒரு ஃபங்ஷன்ல அவரைச் சந்தித்தபோது, நான் நடிக்கும் நல்ல படங்கள் ஏதாவது இருந்தால் சொல்லுகிறேன் நீங்கள் வந்து பாருங்கள்!' அப்படின்னு சொன்ன போது, அவருக்கே உரித்தான புன்னகையுடன் சொன்னார்: 'அப்போ நல்லா இல்லாத படங்கள்ளயும் நடிக்கறீங்களா? ஏன்?' என்று கேட்டார். 'அது இல்லே... சில படங்கள் நல்லா இல்லேன்னாலும் நிர்ப்பந்தம்' என்று நான் கூற, 'அந்த மாதிரி நிர்ப்பந்தத்துல நடிக்கக் கூடாது; நடிக்காதீங்க. உங்களுக்கு சரி என்று தோன்றும் எந்தப் படமும் தவறாகித் தோல்வி அடைந்து விட்டாலும் பரவாயில்லே. ஆனால் இது சரி இல்லே என்று தெரிந்தும் நடிக்காதீங்க!' என்று சொன்னார். நான் சில தவறுகள் எல்லாம் செய்த பிறகு சொன்னார். முன்னாடியே சொல்லியிருக்கக் கூடாதான்னு கூட நினைச்சுப்பேன்! அதை நினைச்சுப் பார்த்ததிலேயிருந்து நான் முடிந்த வரையிலும் எனக்குத் தவறுன்னு தெரிஞ்சதுன்னா, அந்தப் படம் யாருடைய படமாயிருந்தாலும் நிராகரித்து விடுவேன். இது செய்கிறோம், இது தான் செய்கிறோம் என்று தெரிந்தே செய்வேன். இதுல ஒண்ணும் பெருமைப் படக்கூடியது என்று எதுவும் இல்லே! இருந்தாலும் செய்ய வேண்டியிருக்கிறது. சரி; இது தான் இந்த நேரத்துக்கு நியாயம்' என்று தெரிந்து சில படங்கள் செய்கிறேன். அவ்வளவுதான் தவிர, இது ஓடாது என்று நினைத்து நான் எந்தப் படத்தையும் செய்வது கிடையாது. இந்தப் படத்தில் இப்படி நடிப்பதற்குப் பதிலாக, இதை விடக் கொஞ்சம் சிறப்பாகச் செய்திருக்கலாம் என்று நினைத்துச் செய்த படங்கள் உண்டு. அவை அபார வெற்றி அடைந்திருக்கும். அதற்காக என் தொழில் முறையில், என்னைப் பொறுத்த வரையில், அசிரத்தையாகக் கடந்த ஒரு ஐந்து ஆண்டுகளாகச் செய்ததில்லே; என்னையும் மீறி வருகிற தோல்விகள் அவை.

**28. புவனா வெங்கட், புதுக்கோட்டை.**
**உங்களுக்கு ரசிகர்களிடம் பிடித்த குணம் எது? பிடிக்காத குணம் எது?**

ரசிகர்களிடம் பிடித்த குணம்னு சொல்லும்போது, அவர்களுடைய ரசிப்புதான். அதுவும் நல்ல விஷயத்தை ரசிக்கக் கூடிய தன்மையைப் பார்க்கும்போது ரொம்ப சந்தோஷமாக இருக்கும்... அதாவது ஒரு நுணுக்கமான சின்ன விஷயத்தை நாம் செய்யும் பொழுது, 'இதெல்லாம் எங்க புரியப் போவுது?'ங்கற ஒரு இதுல நாங்க முயற்சி எடுத்துட்டு செஞ்சிருப்போம். அதை நாங்க ஒரு தியேட்டர்ல பார்க்கும்போது அதுக்கான ஒரு சின்ன சலசலப்பு — ஒரு கை தட்டலோ அல்லது 'அட'!ன்னு ஒரு சின்ன சத்தமோ எழும்பொழுது அது எனக்கு ரொம்ம்ம்ப சந்தோஷம் தரக் கூடிய ஒரு உணர்வு. அது எனக்கு ரசிகர்களிடத்தில் ரொம்பப் பிடிக்கும் ஒரு குணம்... ரசிகர்கள் கொடுக்கக் கூடிய அவார்ட். என்னு, தன்னையும் மீறி வருகிற பாராட்டு.. தவிர, என்னை நுணுக்கமா கவனித்தாலே ஒழிய அந்த ஒரு ஷொட்டுன்னு சொல்லுவார்களே முதுகில் தட்டிக் கொடுக்கிற தன்மை — தன்னையறியாமல் அது வராது. அப்படிப் பார்க்கும்போது, அந்தக் குணம் அவர்களிடத்தில் எனக்கு ரொம்பப் பிடித்த விஷயம். அதாவது உன்னிப்பாகக் கவனித்து, ரசித்து, 'சினிமாவுக்கு வந்தோம் ஏதோ அரை போதையில் படம் பார்த்துவிட்டுச் சென்றோம்' என்றில்லாமல், துல்லியமாக்கவனிக்கறது எனக்குப் பிடிக்கும்.

பிடிக்காத குணம்னு சொல்லும்போது, அது சகலருக்குமே உரித்தான ஒரு சலிப்பு. ஏதோ நல்ல காரியம் செஞ்சுட்டதா அவன் நெனைச்சுகிட்டு, இதெல்லாம் யார் ரசிக்கப் போறாங்க'ங்கும்போது, வழக்கமா அது தோல்வி அடையும்போது, 'இந்த ரசிகர்களே இப்படித்தான்; அவங்களுக்கு விவஸ்தையே கிடையாது!'ன்னு சொல்றது சாதாரணமா எல்லாக் கலைஞர்களுக்கும் உள்ள ஒரு சலிப்பு. அது எனக்கும் சில கால கட்டங்கள்ள இருக்கத்தான் செய்யுது. ரசிகர்களைப் பொருத்த மட்டில் அதை ஒரு உண்மையான குறையாகச் சொல்ல முடியாது. அவங்க கஸ்டமர்ஸ். அவங்களுடைய திருப்திதான் முக்கியம். அதை நாங்க மீறிட்டு, 'நாங்க இன்டலெக்சுவல்ஸ்...விக்டோரியா டிஸீகா என்ற இத்தாலிய டைரக்டரின் பாதிப்பு எனக்கு இருக்கிறது' என்று சொல்லிக் கொண்டு இருந்தகாலத்தில் இதை உணராமல் இருந்திருக்கிறேன் என்பதுதான் உண்மை.

**29. ஏ. ரங்கநாதன், டோம்பிவிலி, மகாராஷ்டிரா**
**ஒவ்வொரு மனிதனின் வெற்றிக்குப் பின்னால் ஒரு பெண் இருக்கிறாளாமே? உங்கள் வெற்றிக்குப் பின்னால் இருக்கும் பெண் யார்?**

என் வெற்றியில் ஆண்களுக்கும் ஒரு சம பங்கு உண்டு. ஆனால் பெண்கள் என்று பார்க்கும்போது, ஒன்றல்ல, இரண்டல்ல, மூன்று பேர் இருக்காங்க.

**யார் அந்த மூன்று பெண்கள்? — அடுத்த வாரம்!**

**மேலட்டை வண்ணப்படம்: உதிரா**
தொகுப்பு: சித்தார்த்.

# அன்பில் கனிந்து

கோமகள்

"அம்மா!" அவசரமும் படபடப்பு மாக உள்ளே வந்தான் மூர்த்தி.

அவனுக்காகக் காத்திருந்து, கதவைத்திறந்த பூமாவை அவன் கண்டுகொள்ளவே இல்லை. அவனது கரங்கள் அவளுக்காக நீண்டு ஏற்கும் நிறையாகவில்லை.

"என்னடாப்பா மூர்த்தி?" அவன் அவசரத்தைப் பார்த்து ஆச்சரியப்பட்டாள் செல்லம்மாள்.

"வந்த வழியிலே என் நண்பன் ராமுவைப் பார்த்தேன். ராத்திரிச் சாப்பாட்டுக்குக் கூப்பிட்டிருக்கேன். இரண்டு இட்டங்கள் சேர்த்துச் சமைச்சுடலாமா அம்மா?"

"அதற்கென்னப்பா, செய்தால் போச்சு" என்று செல்லம்மாள் ஊஞ்சலில் உட்கார்ந்திருக்கும்போதே, பூமா தூண் மறைவிலிருந்து எழுந்து அடுக்களைக்குள் போய்விட்டாள்.

மூர்த்திக்காக டிபன் தட்டையும், காப்பி டம்ளரையும் கொண்டு வந்து ஊஞ்சலருகில் இருந்த ஒரு ஸ்டூலில் வைத்துவிட்டு, அதனருகே நாற்காலியை எடுத்துப் போட்டு விட்டு வந்தாள்.

காஸ் ஸ்டவ்வைப் பற்றவைத்தாள்.

செல்லம்மாள் உள்ளே வந்து, "ஒன்றில் உருளைக் கிழங்கு போடு பூமா. இன்னொன்றில் உருளையைப் போட்டு சேமியாவை நெய் விட்டு வறுத்துப் பாயசத்துக்குப் போடு" என்றாள்.

"சரிம்மா, பாயசத்துக்குப் பச்சைக் கற்பூரம் போடட்டுமா?"

''சேமியாவுக்கு எதுக்குப் பச்சைக் கற்பூரம்? அது தன்னாலே நெய் வாசனையோடு மணக்கட்டும். முந்திரியைத் தூளா நறுக்கிப் போடு.!''

பூமா நெட்டுயிர்த்தாள்.

மனத்திற்குள் ஆயிரம் கேள்விகள். உருப் புரியாத வேதனைகள். எதைப் பார்த்தாலும் அலுப்பு. எதைப் பார்த்தாலும் சலிப்பு.

இந்த வீட்டில் எந்த ஒருவருமே அவளுக்காகச் சிரத்தை எடுத்துக்கொள்வதில்லை. எவருக்குமே அவள் சிரமம் புரிவதில்லை. யாருமே அவளை ஒரு பொருட்டாக மதிப்பதில்லை.

எப்போதுமே சாப்பிடுவது போல் இரவுக்குச் சாம்பார், ரசத்தோடு ஒரு கூட்டும் பண்ணியிருந்தாள் பூமா. இப்போது நண்பன் வரவுக்காக உருளைக் கிழங்கு பொடிமாஸ், காரட் துருவல், பாயசம் எல்லாம் தயார் பண்ணினாள்.

நண்பன் ராமுவோடு சாப்பிடும்போது அரட்டை அடித்துக் கொண்டே சாப்பிட்டான் மூர்த்தி.

''சாம்பார் படுஜோர், கூட்டு பிரமாதம், சேமியா பாயசம் இவ்வளவு ருசியாகக்கூட இருக்குமா? ஆச்சரியம்தான்! மனைவி நன்றாகச் சமைக்கக் கூடியவளாக இருந்தால் அவள் கணவன் நல்ல அதிர்ஷ்டசாலி என்று அர்த்தம். அந்த விதத்தில் நான் அதிர்ஷ்டசாலி அல்ல.... இந்தச் சாப்பாட்டை நான் மறப்பதற்கு ரொம்ப நாள் பிடிக்கும்'' என்று ராமு பூமாவைப் புகழ்ந்தான்.

''என்ன ராமு, ஒரேயடியாகச் சாப்பாட்டில் மூழ்கிவிட்டாயே, எப்போது பிடித்துச் சாப்பாட்டு ராமனாக மாறினாய்?'' என்று ராமுவைக் கேலிசெய்தான் மூர்த்தி.

விருந்து முடிந்து ராமு விடை பெறும் நேரம் வந்தது.

''மூர்த்தி! ப்ளீஸ் உன் மிஸஸைக் கொஞ்சம் கூப்பிடேன். அவங்களுக்கு நான் தேங்க்ஸ் சொல்லலேன்னா, இந்த விருந்து முழுமை அடையாது...'' என்று நயமாக வேண்டுகோள் விடுத்தான் ராமு.

''வேடிக்கையான ஆள்டா நீ! அதற்கென்ன இத்தனை தயக்கம்? பூமா! வாயேன், ராமு உன்னிடம் சொல்லிக் கொண்டு புறப்படணுமாம்!''

பூமா மெல்லத் தலைகாட்டினாள்.

''வரட்டுமா சகோதரி! உங்க ருசியான சமையலுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.'' கைகூப்பினான் ராமு.

பூமா வெட்கத்தோடு கைகூப்பினாள்.

ராமு விடைபெற்றதும், மூர்த்தி தன் அறைக்குச் சென்று படுத்துக்கொண்டு ஏதோ ஒரு புத்தகத்தைப் படித்துக் கொண்டிருந்தான்.

செல்லம்மாள் சாப்பிட உட்கார்ந்தாள்.

மாமியாருக்குச் சாப்பாடு போட்டவண்ணம், பாத்திரங்களை ஒழித்துப் போட்டாள் பூமா.

''என்ன சமைச்சிருக்கே? அந்தப் பிள்ளையாண்டான் ஏதோ ரொம்பப் புகழ்ந்துட்டுப் போறானே, பிரமாதமாச் சமைச்சிருக்கியோன்னு நினைச்சேன்! சறிகளிலே உப்பு தூக்கலா இருக்கு. பாயசத்திலே ஜீனி தூக்கல். கைவிரல்லே போடற சாமானுக்குக் கணக்கு இருக்கணும். அப்பத்தான் சாப்பாடு ருசிக்கும். சாமான்களும் அதிகம் செலவழியாது....''

செல்லம்மாளின் சொற்கள் இவள் நெஞ்சை அடைத்தன.

மௌனமாகத் தன் காரியத்தில் ஈடுபட்டிருப்பதைப் போல வாளாவிருந்தாள் அவள்.

சாப்பிட்ட தட்டை 'ஸிங்க்'கில் போட்டுவிட்டு, ''உம், சாப்பிட்டுட்டு மத்த வேலையைப் பார்க்கிறது...'' என்று சற்றுக் கடுமையாகக் கூறிவிட்டு வெளியேறினாள் செல்லம்மாள்.

சுவர்க் கடிகாரத்தின் மணி பத்து அடித்தது.

இன்னும் பூமாவைக் காணோம்.

காதைச் சற்றுக் கூர்மையாக்கிக் கீழே என்ன நடக்கிறது என்று உற்றுக் கவனித்தான். தரை சமூவும் ஓசை கேட்டது. ஓ! அப்படியானால் மற்ற வேலைகள் முடிந்துவிட்டன.

மஞ்சம் கிரீச்சிடும் ஓசை கேட்கிறது. அம்மா எழுந்திருக்கிறாள். பால் டம்ளரை அம்மாவிடம் தந்துவிட்டு மேலே வந்துவிடுவாள் பூமா.

அவள் உள்ளே நுழைந்ததும், மூர்த்தி அவளைக் கவனியாதவன் போல் படுத்திருந்தான்.

பால் டம்ளரை ஸ்டூலில் வைத்துவிட்டு மெல்ல அவன் தோள்களைத் தட்டினாள் பூமா.

மூர்த்தி எழுந்து உட்கார்ந்தான். பாலை ஒரே மடக்கில் குடித்துவிட்டு டம்ளரைத் தூர வைத்தான்.

ஈரமாகிவிட்ட புடவையும், ஈரக் கண்களுமாய், உடல் நோக, உள்ளம் நோகத் துவண்ட கொடியாகப் படுக்கையில் விழுந்தாள் பூமா.

''பூமா!''

---

**மரத்துக் கீரை, மரத்துக் காய்!**

செட்டிநாட்டில் நகரத்தார் சமூகத்துப் பெண்கள், கணவன் பெயரோ மாமனார் பெயரோ 'முருகப்பன்' என்று இருந்தால் 'முருங்கைக் கீரை, முருங்கைக் காய்' என்று கூடக் கூறமாட்டார்கள். 'மரத்துக் காய், மரத்துக் கீரை' என்றுதான் குறிப்பிடுவார்கள்!

இளம் தலைமுறையினரிடம் இந்தப் போக்கு மாறி வருகிறது.

முரு. சொ. தியாகராஜன்



அவன் அழைப்பால் அவள் நெஞ்சில் பூக்கள் மலரவில்லை.

தன் அழைப்பை அவள் வரவேற்கவில்லை என்பது புரிந்தது. தன் சைகையை அவள் உணராதவள் அல்ல என்பதால், "பூமா! அதிக வேலை இன்று உனக்கு... கஷ்டமாயிட்டதா?" என்று ஆறுதலாக அவள் முகத்தைத் திருப்பினான். விரலில் உணர்ந்த ஈரத்தால் அவள் அழுகையையும் உணர்ந்தான்.

அவன் சட்டென எழுந்து உட்கார்ந்தான்.

"பூமா! என்னம்மா வந்தது உனக்கு?"

பூமா தன் முகத்தைத் திருப்பிக்கொண்டு தன்னைக் கட்டுப்படுத்திக்கொள்ள முடியாது தவித்தாள். விம்மலின் சிற்றசைவு, அவள் முதுகில் தெரிந்தது.

"ஓ! எனக்குப் புரிகிறது. இந்த வாழ்க்கை உனக்குக் கஷ்டமாக இருக்கிறது. கடினமாக இருக்கிறது. அதுதானே?"

அவள்விம்மல் அடங்கிமௌனம் நிலவியது.

"பூமா!" அவன் முதுகுத் தண்டை வருடும் கைகளில் ஒரு ஆறுதலைத் தூதனுப்பினான். "என்னன்னு சொல்லேன். நீயே குமைஞ்சு போனா எப்படி?"

"உம்! ரொம்ப அக்கறை!" பேச்சுக்குத் தயாரானாற்போல் குரல் வந்தது.

"பூமா! முதலில் எழுந்து கண்ணைத் துடைத்துக்கொள். எதுக்கு திடீர்னு அப்படி 'அவுட் பர்ஸ்ட்' ஆனே? சொல்லேன்."

"உங்கம்மா நாம் காதல் கல்யாணம் பண்ணிக்கிட்டவங்கங்கறதை மறக்கவேமாட்டாங்க போலிருக்கு..."

மூர்த்தி மௌனமானான்.

அந்த மெல்லிருளில் அவள் முக உணர்ச்சிகளைத் தேடினான் அவன்.

"பார்த்தீங்களா இதுக்குத்தான் நான் எதையுமே சொல்றதில்லை. எதையும் காட்டிக்கிறதுமில்லை...."

"நோ பூமா! என்னோட மௌனம் உன்னை எதிர்க்கறது இல்லை. உன்னை ஆமோதிக்கிறதுதான்! ஆனாலும் முன்னாலே நடந்ததை ஞாபகப்படுத்தறது நல்லதுன்னு நினைக்கிறேன். என்னை நீ கணவனாக ஏற்க முன்வந்த போது நான் .வேண்டுகோள் விடுத்தது ஞாபகம் இருக்கும். "இதனால் நீ ரொம்ப சிரமப்பட வேண்டி யிருக்கும். கஷ்டங்கள் அனுபவிக்க வேண்டி யிருக்கும், ஏன்னா நான் என் அம்மாவை எதிர்க்கமாட்டேன்'னு சொன்னேன். வறுமையின் பிடியிலே பல இன்னல் பட்டு, துயர் அனுபவித்து, இன்று சுமாரான நிலைக்கு வந்த பின், அம்மாவை நான் மறந்துவிடுவது நியாயமாகாது. ஏன்னா என் தாய்தான் எனக்கு எல்லாமும்...."

மூர்த்தி இன்னும் தொடர இருந்தபோது, இடைவெட்டினாள் பூமா.

"இவ்வளவுதானே? இதை நீங்க சொல்ல வேண்டுமா? என் மனமுவந்துதான் என்னை உங்ககிட்டே ஒப்படைக்க முன்வந்தேன்.

ஆனால்... நான் இத்தனை தூரம் ஓய்வே இன்றி உழைக்க நேரும்னு, உழைச்சும் கூடக் குறை கேட்க நேரும்னு நான் எண்ணியதே இல்லே. என் அன்பை எல்லாம் கொட்டித் தந்துவிட்டு, ஏமாற்றம் ஒன்றையே பதிலாக ஏத்துக்கறேன். என் பண்பு இத்தனை நாளும் உள்ளக் குமுறலை வெளி விட ஒப்பவில்லே. நான் கடைப்பிடிக்கும் நாகரிகம் குறைகூற அனுமதிக்கவில்லை... ஆனால் என்னையே கொன்றுகொண்டு இப்படி எத்தனை நாள்தான் வாழ முடியும்? நீங்கள் கூட அதை உணராது...'' இப்போது அவள் குரல் மீண்டும் விம்மலில் கரைந்தது.

''பூமா! நான் அதை உணர்றேன் பூமா!''

''அப்படீன்னு ரெண்டு பேரும் காதலிச்சுக் கல்யாணம் பண்ணிக்கிட்டதில் எனக்கு மட்டும் ஏன் இந்தத் தண்டனை?'' அவள் உடல் குலுங்கியது. அடக்கப்பட்டிருந்த துயரம் அணை உடைத்தாற்போல் பெருகியது.

''பூமா! அழாதேம்மா அழாதே....'' அவளைத் தன் நெஞ்சோடு அணைத்துக் கொண்டு கலங்கினான் அவன். ''ஆமா பூமா! இந்தக் காதல் மண வாழ்க்கையில் உனக்கு மட்டும்தான் தண்டனைன்னு சொல்லியே, யார் சொன்னது அப்படி? நீ என்னை அங்கீகரிச்சதுக்கு, உனக்கு எப்படி தண்டனை கிடைக்கிறதோ, அதே போல் நான் உன்னை அங்கீகரிச்சதுக்கும் எனக்கு அம்மா தண்டனை தர்றாங்க பூமா....!''

''என்ன சொல்றீங்க? உங்களுக்கும் அம்மா தண்டனை தர்றாங்களா?''

''ஆமாம் பூமா! நீ படற கஷ்டங்கள் எனக்குப் புரியாமல் இல்லே. உன்னைக் கைபட்டால் குற்றம், கால் பட்டால் குற்றம் என்று அம்மா குறை கூறுகிறாள். செய்யற காரியங்களையும் அது சொத்தை, இது சொள்ளைன்னு சிரிக்கிறாள். சமையல் பண்ணினால் சர்க்கரை தூக்கல், உப்புப் போறலேன்னு முணு முணுக்கிறாள். முழுக்க முழுக்க உன் பணிவிடைகளிலே சுகம் அனுபவிச்சுக்கிட்டே நீ சதா சர்வதா ஒன்றுமே செய்யாமல் உட்கார்ந்திருப்பது போல் கடுகடுக்கிறாள்... எல்லாமே எனக்குப் புரியுதும்மா... புரியுது. ஆனாலும் நான் வெளிப்படையாகக் காட்டும் அன்பும், அனுதாபமும் உனக்கு மேலும் எதிரிகளாக மாறக்கூடாதுன்னுதான், நீ பொறுத்துக் கொண்டு போவது போல, உன்னை விட உன் துயரைக் கண்டு மனம் நோகற நானும் உன்னைப் போலவே மனதிற்குள் பூட்டி வைத்துக் கொண்டு வெந்து கொண்டிருக்கிறேன். இது என் அம்மா எனக்குக் கொடுக்கிற தண்டனையா இல்லையா பூமா? ஆனாலும் நம்ம திருமணத்துக்கு மறுக்காமல், நாம ஒன்னு சேரச் சம்மதித்தாளே அம்மா, அது போதுமென்னு தான் என்னை நானே சமாதானப்படுத்திக்குவேன்.'' — அவன் உள்ளத்தின் ஆழத்திலிருந்து ஒலித்த அச்சொற்கள், வெப்பத்திற்கு சந்தனம் தடவுவது போல் பூமாவுக்கு இதமாக இருந்தது.

உள்ளம் நெகிழ அவன் கரத்தைப் பற்றிக் கொண்டு, ''என்னை மன்னிச்சுடுங்க, ப்ளீஸ், என்னை மன்னிச்சுடுங்க...'' என்றாள்.

''சீ! அசடுதான் போ! இதிலே மன்னிக்க என்ன இருக்கு? நமக்கு வாழ்க்கை நுனிக் கரும்பா ஆரம்பிச்சிருக்கு. இனிப்பா இருக்கிற அடிக் கரும்பின் சுவையைச் சீக்கிரமே ருசிப்போம் பாரேன்!'' அவளை உற்சாகப் படுத்தினான் அவன்.

அதிகாலையில் காப்பிக்காக அடுக்களைக்கு வந்த மூர்த்தி, பூமாவைப் பற்றித் தன்னருகே இழுத்தான். அவள் மெள்ளமாக அவன் மார்பில் சாய்ந்தபோது 'ஹ்ம்' என்ற சன்னப்பொலி கேட்டது.

செல்லம்மாள் வாசற்படியில் நின்றாள். ''என்ன இதெல்லாம்?'' என்று சொற்களில் கடுமை பரவியிருந்தது.

''அம்மா! அம்மா! பூமா மயக்கமாகிட்டாம்மா!'' பதறினான் மூர்த்தி.

செல்லம்மாளும் ஒரு கை கொடுக்க, இருவரும் அவளை ஊஞ்சலில் படுக்க வைத்தனர். ஒரு ஈரக் கைக்குட்டையால் அவள் முகத்தைத் துடைத்துவிட்டாள் செல்லம்மாள்.

பூமா கண் விழித்ததும் சட்டென்று எழ முயன்றாள்.

''பேசாமல் படு பூமா! கொஞ்ச நேரம் கழிச்சே எழுந்திருக்கலாம். மூர்த்தி! என்னடா பயந்துபோய் நிக்கறே, ஒன்னுமில்லே. சந்தோஷ சமாசாரம்தான்! அப்படி இருக்குமோன்னு நானும் சந்தேகப்பட்டுக்கிட்டே இருந்தேன். கோடி வீட்டு அம்புஜம், சமைக்கறதுக்கு ஒரு நல்ல பொண்ணு இருக்கான்னு சொன்னா, அவளை நம்ம வீட்டுக்கு அமர்த்திக்கலாம். குடும்ப நிர்வாகம் மட்டும் பூமா பாக்கட்டும்...! என்னப்பனே முருகா! பழனியாண்டி! ஆண்பிள்ளை பிறந்தா உன் கோயில்லேதான் மொட்டை!....'' என்றவாறே பூமாவுக்கு காப்பி போடச் செல்லம்மாள் சென்றாள்.

''பூமா! பூமா! இத்தனை சீக்கிரமா அடிக் கரும்புக்கிட்ட வந்துடுவோம்னு நான் நினைக்கவே யில்லே பூமா!'' என்று கிசுகிசுத்தான் மூர்த்தி.

செங்கரும்பின் நிறம் அவன் முகத்தில் அப்பிக்கொண்டது.

---

நண்பன்: ''ஏண்டா பாலு! டயலாக், கேடலாக் இந்த இரண்டுக்கும் என்னடா வித்தியாசம்?''

பாலு: ''இரண்டு ஆண்கள் பேசிக் கொண்டா டயலாக். இரண்டு பெண்கள் பேசிக் கொண்டா கேடலாக்!



# இது உங்க தெருவா சார்?

"டேய் பசங்களா! தயவுசெய்து தெருவிலே பந்து விளையாடாதீங்க. ஏதாவது கிரவுண்டிலே போய் விளையாடுங்க!" என்றபடி வெளியே வந்தார் கேசவன்.

மிக மும்முரமாகவும், உற்சாகத்துடனும் பந்து விளையாடிக் கொண்டிருந்த பையன்கள் அவரைக் கண்டு கொண்டதாகவே காட்டிக் கொள்ளவில்லை. அவர்கள் பாட்டுக்குப் பந்தை அடித்துக் கொண்டிருந்தனர்.

"டேய் நான் சொல்றது உங்களுக்குக் காதிலே விழலே?" என்றபடி தெரு நடுவில் போய் நின்றார் கேசவன்.

பையன்களின் பந்து விளையாட்டு நின்றது.

"ஏன் சார் நாங்க தெருவிலே விளையாடினா உங்களுக்கென்ன? இது என்ன உங்க தெருவா?"

"பந்து உங்க வீட்டுக்குள்ள வந்தா கேளுங்க" என்றான் அந்தக் கும்பலில் பெரியவனாயிருந்த ஒருவன்.

"ஆமாம் சார். நாங்க அப்படித்தான் விளையாடுவோம். நீங்க இப்படி நடுவிலே நின்னா உங்க மேலேயும் பந்து அடிபடும். அப்புறம் நீங்க எங்க மேலே கோபிக்கக் கூடாது. இல்லேன்னா பேசாமே இங்கிருந்து போயிடுங்க" என்று மற்றொரு பொடியன் மிரட்ட, எல்லாச் சிறுவர்களும் கோரஸாக அதை ஆமோதித்தனர்.

தன் முன் நிற்கும் பிஞ்சுகளைக் கனிவுடன் பார்த்தார் கேசவன். "ஆமாம்பா. இது என்னோட தெரு இல்லை தான். இந்த மாதிரி தெருவிலே பந்து விளையாடாதீங்கன்னு என் கிட்ட ஒருத்தர் சொன்னதை நான் சின்ன பையனா இருந்தப்போ, கேட்காததினால்தான் என்னோட ஒரு கால் போச்சு... பந்து பின்னாலே கண் மண் தெரியாமே ஓடினப்போ எதிரே வந்த கார் கால் மேலே ஏறினதின் பலன் அது. இந்த மாதிரி ஏதும் உங்களுக்கு வரக்கூடாதுன்னு தான், உங்களை ஏதாவது கிரவுண்டிலே போய் விளையாடச் சொன்னேன்" என்றபடி தம் வலது கால் பேண்டைத் தூக்கினார் கேசவன்.

அங்கே முழங்காலுக்குக்கீழே கட்டைக்கால் ஒன்று நின்று கொண்டிருந்தது. அதைப் பார்த்த சிறுவர்கள் ஸ்தம்பித்து நின்றனர்.

முதலில் கேசவனிடம் எதிர்த்துப் பேசிய பையன் மெதுவாகப் பந்தைக் கையிலெடுத்தான், கேசவனை பார்த்து "எங்களைமன்னித்து விடுங்கள் சார்" என்று கூறி விட்டு நடக்க ஆரம்பித்தான். மற்ற சிறுவர்களும் மௌனமாக அவனைப் பின் தொடர்ந்தனர்.



# நீங்கள் கேட்டவை

○ ராஜ சௌந்திரன், ஈரோடு.

? அமெரிக்க பாகவதர் ஜான் ஹிகின்ஸ் குறித்து?

! அவருடன் நன்கு பழகிய பேராசிரியர் எஸ். ராமநாதனைத் தங்களுக்குப் பதில் கூறுமாறு அழைக்கிறேன்: ''என்னிடம் மூன்று மாதங்கள் கர்நாடக இசை பயின்ற ஜான் ஹிகின்ஸ் பயிற்றுவிப்பதற்கு நல்ல மாணவர் என்பதோடு பழகுவதற்கு எளிய மனிதர். பாட்டை அர்த்தமுணர்ந்து பாட வேண்டும் என்பதற்காக தமிழ், தெலுங்கு, சமஸ்கிருதம், மூன்றும் கற்றுக் கொண்டார். இந்தியாவுக்கே வந்து மறுபடி நம் இசையை ஆழ்ந்து கற்க ஃபுல்பிரைட் ஸ்காலர்ஷிப் பெற்றார். கர்நாடக இசையில் சக்கைபோடு போட்ட ஹிகின்ஸ் மேற்கத்திய இசையிலும் புலி. மியூஸிக் கண்டக்டராக இருந்தார் அங்கே. அப்படிப்பட்டவர் கர்நாடக இசையில் ஆர்வம் கொண்டது நமக்கெல்லாம் பெருமை. நமது பதங்களைப் பற்றி ஆய்வு செய்து வெஸ்லியன் பல்கலைக் கழகத்தில் டாக்டர் பட்டம் பெற்றார். சென்ற முறை அவர் சென்னை வந்திருந்த போது இந்தியன் ஃபைன் ஆர்ட்ஸில் பாடியது பலருக்கும் பசுமையாய் நினைவிருக்கும். அற்புத சாரீர வளம் கொண்டவர். அவர் சாலை விபத்தில் மாண்டது 'இசை உலகுக்குப் பேரிழப்பு' என்றால் அது சம்பிரதாயச் சொல் அல்ல. மெய்யாலுமே உலகளாவிய இழப்புதான்.''

○ 'பி. சோமசுந்தரம், அழகாபுரம். ★

? அரசு ஊழியர்கள் பணிக்காலத்தில் மரணமடைந்தால் ரூ. 15 ஆயிரம் தருவதாக தி. மு. க. கூட்டணியும். ரூ. 20 ஆயிரம் தருவதாக அ. இ. அ. தி. மு. க. கூட்டணியும் தேர்தல் அறிக்கை விட்டிருப்பது பற்றி?

! தி. மு. க. அறிக்கை வெளியாகும் வரை காத்திருந்து ஏட்டிக்குப் போட்டியாக அறிவித்தது அ. தி. மு. க. வரவர சலுகைகள் கூட ஏலம் போடுகிற மாதிரி ஆகிவிட்டன. ஆட்சியிலுள்ள கட்சித் தலைவர்கள் இந்நாள் வரை சும்மா இருந்து விட்டு அவசரமாகத் தேர்தலுக்கு முன்பு அதிகார பூர்வமான பேச்சு வார்த்தை நடத்தி அரசு ஊழியர்களுக்குச் சலுகைகள் அறிவித்தது லஞ்சம் தந்து அவர்கள் ஒத்துழைப்பைக் கோரியதற்குச் சமமே.

○ கே. கணேஷ், சென்னை–6.

? எம். ஜி. ஆர். படத்தை போஸ்டரில் போட்டு கருணாநிதி வோட்டுக் கேட்பது அவருடைய ராஜதந்திரமா, பலவீனமா?



○ அதிர்ச்சி வைத்தியம்



○ சிறந்தவர்

! ராஜ தந்திரமல்ல, பலவீனம் என்றே வைத்துக் கொள்வோமாயினும் எம். ஜி. ஆர். பிராபல்யத்தை மட்டுமே நம்பி அந்த ஒரே அடிப்படையில் வோட்டுக் கேட்கும் அ. தி. மு. க. வின் பலவீனத்தை விட அது பெரிய பலவீனம் அல்ல.

○ ஜி. ராஜசேகரன், வலங்கைமான்.

? கிராமத்துப் பெண்களின் பிளஸ் பாயின்ட் எது? நகரத்துப் பெண்களின் மைனஸ் பாயின்ட் எது?

! ஆரோக்கியம். அங்கு பிளஸ்; இங்கே மைனஸ்.

○ பி. டி. சண்முகராஜ், பல்லாவரம்.

? ஏழு தேர்தல்கள் மூலம் எதைச் சாதித்தோம்?

! ஜனநாயகம் உயிரை விடாமல் காப்பாற்றி வருகிறோமே – வேறு பல நாடுகளைப் பார்க்கையில் ஏழு தேர்தல்களே ஒரு சாதனைதான்.

○ எஸ். ரமேஷ், திருச்சி.

? கலை உலகம் பாராளுமன்றத்தைத் திரை உலகமாக மாற்றுமா? பாராளுமன்றம் திரை உலகத்தைப் பாராளுமன்றமாக மாற்றுமா? எப்படி என் கேள்வி?

! மாற்றுவதென்ன, இப்போதே அப்படித் தானே இருக்கிறது! எப்படி என் பதில்!

○ இரணியல் கலை, சென்னை–57.

? எழுத்தாளராக இருப்பதைவிட ஒரு நடிகராக இருந்திருக்கக் கூடாதா என்று எப்போதாவது எண்ணியதுண்டா?

! சுதந்திரப் போராட்ட வீரரும் எழுத்தாளரும் பத்திரிகை ஆசிரியருமான கல்கியைத் தேர்தலுக்கு நிற்குமாறும் அவரது சொந்த ஊர்த் தொகுதியையே அவருக்கு ஒதுக்குவதாகவும் காங்கிரஸ்

— தராசு

○ அழகிய பேச்சு





## கபில்தேவ் மீண்டும் காப்டன் ஆவாரா?



தமிழ் வயலின்



அமெரிக்க பாகவதர்



ஈரமான...



ரோஜாவே...

பெருந்தலைவர் கேட்டுக் கொண்டார். அமைச்சர் பதவி கூட வாக்களிக்கப் பட்டது. 'நான் இப்போது செய்து கொண்டிருக்கிற காரியத்தை விட எம். எல். ஏ. பதவியோ, அமைச்சர் பதவியோ உயர்ந்ததாகவோ முக்கிய மானதாகவோ நான் கருதவில்லை' என்று பதில் கூறிவிட்டார் கல்கி. அவரைப் பின்பற்றிப் பேனா பிடிப்ப வர்கள் எழுத்துத் தொழிலைவிட, வேறொன்றைச் சிறந்ததாக எண்ண மாட்டார்கள். அதற்காக ஏங்கவும் மாட்டார்கள்.

○ எம். செல்லையா, சாத்தூர்.

? ஆண் நாட்டியக் கலைஞர்களில் தங்களைக் கவர்ந்தவர் யார்?

! கவர்ந்தவர் கமல்; சிறந்தவர் தனஞ்செயன்.

○ பொன்னி, நாகப்பட்டினம்.

? உங்களுக்கு எந்த சோவைப் பிடிக்கும்?

! ஜனதா கட்சியிலும் இருப்பேன், பத்திரிகை சுதந்திரத்தையும் காத்துக் கொள்வேன் என்று கூறித் தாமும் குழம்பி, மற்றவர்களையும் குழப்பி வருகிற சோவைத் தவிர மற்ற எல்லா சோக்களையும் பிடிக்கும்.

○ ஆரூர் பாஸ்கரன், திருவாரூர்.

? ஆத்ம திருப்திக்காக எழுதுகிறேன் என்பவர் கூட ஆபாசமாக எழுதுவது ஏன்?

! அதில்தான் அவருக்கு ஆத்மதிருப்தி கிடைக்கிறதோ என்னவோ?

○ எஸ். எஸ். ரவீந்திர ஹரிஹரன், சிவன்மலை.

? மாருதி, ஜெயராஜ், ராமு, லதா இவர்கள் கைவண்ணத்தில் தங்களைக் கவர்ந்தது?

! ஏன் மணியன் செல்வன், அரஸ் ஆகியோரை விட்டுவிட்டீர்கள்? என்னை வம்பிலே மாட்டி வைக்கவா?

○ மங்களா சேஷாத்ரி, சென்னை—50.

? சமீபத்தில் பார்த்த நல்ல நாடகம்?

! கொஞ்சம் கதை + கொஞ்சம் நகைச்சுவை + கொஞ்சம்செய்தி = கலைவாணி கலாமந்திர் நாடகம். இவர்களது சமீபத்திய நாடகமான ஈரமான ரோஜாவே இந்த நல்ல ஃபார்முலாவுக்கு விதிவிலக்கு அல்ல. கண்தானம் பற்றி வேறு எந்த நாடகத்திலும் இதுவரை இத்தனை பொருத்தமாகவும் நாசூக்காகவும் வலியுறுத்தியதாகத் தெரியவில்லை. சமையல் [illegible]த்தியாக வந்து நாகராஜன் பேசும் நறுக் வசனங்களில் தரம் குறையவில்லை என்பதால் நகைச்சுவை அதிகம். கதை, வசனம், டைரக்ஷன் தவிர ராகவேந்திரா பாத்திரமும் ஏற்றுள்ள ரமணி எதிலுமே குறை சொல்ல வைக்கவில்லை. கார் ஆக்ஸிடெண்ட்டின் நாடகத்தின் முக்கிய காட்சி. ஸ்பெஷல் எஃபெக்ட் ராஜ்மோகனுக்கு சபாஷ்.

○ ஆர். சிவராஜ், லால்குடி.

? கருணாநிதி வானொலியில் ஆற்றிய உரையைக் கேட்டீர்களா?

! இலக்கிய நயமும் கருத்துச் செறிவும், நகைச்சுவையும் அவர் பேச்சுக்களில் எப்போதுமே உண்டு. இப்போதும் மிளிர்ந்தது. கர்ப்பிணிப் பெண்களுக்குப் பண உதவியாமே? உங்கள் ஊரில் யாருக்காவது கிடைத்ததா? அல்லது ஒருவேளை யாருமே கர்ப்பம் தரிக்கவே இல்லையா? என்ற போது குபீர்ச் சிரிப்பு நம்மை அறியாமல் எழுந்தது. தி.மு.க. கொள்கைகளை ஏற்காதவர்கள் கூடக் கலைஞரின் பேச்சை ரசிக்க முடியும் என்பது அவர் தனிச் சிறப்பு. அதற்கு அடுத்தபடியாக நான் மிகவும் ரசித்தது ஹிந்தியிலும், ஆங்கிலத்திலும் ஹெக்டேயின் ஆணித்தர வாதங்களுடன் கூடிய ஆற்றொழுக்கு நடையில் அமைந்த அழகிய பேச்சு.

○ ஆர். சுப்பாராவ், திருக்கோவலூர்.

? வயலின் வித்வானுக்கு விருது வழங்குவது தமிழிசையை வளர்க்குமா?

! இதென்ன கூத்து! தமிழிசைக்கு வயலின் தேவையே இல்லை என்று கூடச் சொல்வீர்கள் போலிருக்கே! பக்கவாத்தியமாக மட்டுமின்றி ஸோலோ வாசிப்பிலும் தமிழ்க் கீர்த்தனைகளை இனம் கண்டு ரசிக்க முடியும். ஏன், அர்த்த புஷ்டியுடன் பாவ பூர்வமாகவும் கூட வாசிக்கக் கூடியவர் லால்குடி.

○ அ. செல்வராஜ், கரூர்.

? கபில்தேவ் மீண்டும் கேப்டன் ஆவாரா?

! டீமிலேயே காணோம், காப்டன் ஆவாராவது? பணத்தாசைக்கு அடிமைப்பட்டாலும் ஒற்றுமை காட்டி ஒத்துழைப்பு தந்து பொறுப்புணர்வுடன் ஆடாத போனாலும் அதிர்ச்சி வைத்தியம் அவசியம்தான் ஆனால் இந்த அளவுக்கு அல்ல. கவாஸ்கர் வைத்தியத்தில் ஏற்கனவே நாலு பேர் குளோஸ்!

★ ரூ. 10 பரிசு பெறுபவர்:
பி. சோமசுந்தரம்,
அழகனுபுரம், இரவிபுதூர் அஞ்சல்,
குமரி (மா. வ.)

**போ**பால் பயங்கரத்தின் மூல காரணத்தைத் தேடினால் இருபது ஆண்டுகள் பின்னேக்கிச் செல்ல வேண்டும். 1960களின் மத்தியில் இந்தியா 'பசுமைப் புரட்சியில்' ஈடுபட்டிருந்தது. நிரந்தர உணவுப் பற்றுக் குறையை ஒழிப்பதே மத்தியஅரசின் திட்டம். இந்தத் திட்டத்தின் வெற்றிக்குப் பூச்சிக் கொல்லிகள் மற்றும் இரசாயன உரங்களின் தயாரிப்பை அதிகரிப்பது மிக அவசியமாய் இருந்தது. அதனல் ஒரு பூச்சிக் கொல்லி தயாரிப்பு ஆலை ஆரம்பிக்கும் திட்டத்துடன் யூனியன் கார்பைட் இல்லியை அணுகியதும் அதிகாரிகள் சாதகமாகவே பேசினர். 1969 இல் போபால் தொழிற்சாலைக்கான ஒரு செயல் முறைத்திட்டம் தயாராயிற்று.மூன்று ஆண்டுகள் கழித்து இரு சாராரும் (letter of Intent) இல் கையொப்பம் இட்டனர் 1975இல் இந்திய அரசு பூச்சிக்கொல்லித் தயாரிக்க யூனியன் கார்பைடுக்கு லைசென்ஸ் வழங்கிற்று. 51 சதவிகித உரிமை யூனியன் கார்பைடிடமும் எஞ்சிய 49 சதவிகித உரிமை இந்திய தனியார் நிறுவனங்கள் கையிலும் அமைய கம்பெனி நிறுவப்பட்டது.

**அந்தரங்க உறவு:** அந்த நாட்களில் போபாலின் சுற்றுப்புறத்தில் அதிக ஜன நெரிசல் இருக்கவில்லை. இப்போது மத்தியப் பிரதேச தலைநகரில் 9,00,000, மக்கள் வசிக்கிறர்கள். யூனியன் கார்பைட் தொழிற்சாலையை நகர எல்லையில் தான் அமைத்தது. 1975 லேயே எம். என். புச் என்ற பொதுத்துறை அதிகாரி ரயில் பாதையும், தொழிற்சாலையும் ஜனப் பெருக்கத்தை ஏற்படுத்தும் என்று எதிர்பார்த்தார். தொழிற்சாலையை நகர எல்லையைத் தாண்டி வெளியே எடுத்துச் செல்ல முயன்றூர். அபாயகரமான பொருட்களைத் தயாரிக்கும் தொழிற்சாலைகள் ஜன நெரிசலுள்ள இடங்களிலிருந்து 15 மைல்களாவது தள்ளி இருக்க வேண்டும் என்ற சட்டத்தை மேற்கோள் காட்டினர். ஆனல் எதுவும் நடக்கவில்லை. புச் வேறு பொறுப்பிற்கு மாற்றப்பட்டார். அதைத் தொடர்ந்து நகரப் பூங்கா ஒன்றுக்கு 2500டாலர் நன்கொடை வழங்கியது யூனியன் கார்பைட். தொடர்ந்து சில வருடங்களில் ஒரு லட்சத்துக்கு மேற்பட்ட மக்கள் போபாலுக்கு வட கிழக்கே ஜயபிரகாஷ் நகர் காளி பரேட் போன்ற இடங்களில் குடியேறினர்.



✖ கண்கள் புண்ணுகியிருக்கின்றன (படம்: யோகா)

காலப் போக்கில யூனியன் கார்பைட்டுக்கும் உள்ளூர் அரசியல் அமைப்புக்கும் இடையே பந்தம் ஏற்பட்டு வலுப்பட்டது. இந்த அந்தரங்க உறவுக்குப் பகுதிக் காரணம் யூனியன்கார்பைட் உள்ளூர் ஆட்களையே நிர்வாகப் பதவிகளில் நியமிக்க வேண்டியிருந்தமைதான். இந்திரா காங்கிரஸைச் சேர்ந்தவரும் இந்திரா காந்தியின் அரசியல் ஊழியருமான உள்ளூர் அதிகாரி ஒருவர் ஆலையின் வக்கீலாக நியமிக்கப்பட்டார். மத்தியப் பிரதேசத்தின் முன்னுள் போலீஸ் உயர் அதிகாரி ஆலையின் பாதுகாப்பு காண்ட்ராக்டைப் பெற்றூர். முன்னுள் கல்வி அமைச்சரின் மருமான் வெளியுறவு அதிகாரியாகப் பொறுப்பேற்றூர். மாநிலத்தின் துணைத் தலைமைச் செயலருடைய மச்சினர் ஆலையில் ஓர் உயர் மட்டப் பதவியில் அமர்த்தப்பட்டார். ஷ்யாமளா குன்றுகளில் இருக்க யூனியன் கார்பைடின் விருந்தினர் மாளிகையில் உள்ளூர் பெரிய மனிதர்களுக்கு ஆடம்பர விருந்துகள் அளிக்கப்பட்டன. 1983 இல் போபாலில் நடந்த இந்திராகாங்கிரஸ் ஆட்சியின் மாநில கூட்டத்தொடருக்கு வந்த விஐபிகள் அந்த விருந்தினர் மாளிகையில் தங்கினர்கள்.

இந்த அந்தரங்கத் தொடர்புகள் காரணமாக முன் கூட்டியே அளிக்கப்பட்ட பல எச்ச

**போபால் பயங்கரம் பற்றி, துயர அனுபவங்கள் குறித்து பத்தி பத்தியாக நாளிதழ்கள், சஞ்சிகைகளில் படித்தோம். இதோ அதன் அரசியல் பின்னணியை 'நியூஸ்வீக்' பத்திரிகை பிட்டுப் பிட்டு வைக்கிறது.**

# போபால் பயங்கரத்தின்

ரிக்கைகள் பொருட்படுத்தப்படவில்லை என்று தொழிற்சங்கத் தலைவர்களும் சுற்றுச்சூழல் காப்புக் குழுக்களும் குற்றம் சாட்டியுள்ளன. 1978, டிசம்பர் 24 அன்று ஆலையின் நாஃப்தா கிடங்கில் ஒரு பெரிய தீ விபத்து நேர்ந்து நகரமெங்கும் கரும் புகை மண்டலமாகி விட்டது. ''அன்றிரவு போபாலில் யாரும் தூங்கவில்லை'' என்று நினைவு கூர்ந்தார் ஒரு உள்ளூர்வாசி. 1981 டிசம்பர் 26 அன்று அஷ்ரஃப் என்ற ஊழியர் ஃபாஸ்ஜீன் வாயு ஒழுகியது காரணமாக ஆலைக்குள்ளேயே இறந்து போனார். அஷ்ரஃப் முகமூடியை எடுத்ததுமே வீழ்ந்து விட்டதாக ஒரு மேற்பார்வையாளர் கூறினார். ஆனால் நிறுவனம் வாயு ஒழுகியதற்குக் காரணம் என்ன என்றே கூறவில்லை. பதினைந்து நாட்கள் கழிந்து மீண்டும் ஃபாஸ்ஜீன் வாயு ஒழுகியதில் 24 பேர்கள் கடுமையாகப் பாதிக்கப்பட்டனர். இவர்களுள் பலர் உள்ளூர் வாசிகள்.

✖ விஷவாயுவுக்குப் பலியான ஒருவர்

**சிறிய கலவரம்:** 1982, அக்டோபர் 5 அன்று நடு இரவில் இரண்டு பைப்களுக்கிடையே இணைப்பு உடைந்து விடுபட்டுப் போய் வாயு வெளிப்பட்டு அருகில் இருந்த குக்கிராமங்களுக்கெல்லாம் பரவியது. இதன் காரணமாக நடந்த சிறிய கலவரம் சமீபத்தில் நிகழ்ந்த மாபெரும் கலவரத்துக்கு முன்னோடியோ என்று எண்ணத் தோன்றுகிறது. 1983-ல் இரண்டு சிறிய ஒழுகல்கள் ஏற்பட்டன. ஜனவரி 1984-ல் அருண் மாதுர் என்ற ஊழியர் ரசாயன ஒவ்வாமை காரணமாக உயிர் இழந்தார். உள்ளூர் யூனியன் பிரதிநிதிகளின் தகவல்படி மாதுர் குடும்பத்தை ராஜஸ்தானுக்குக் குடி பெயர்ந்துவிடுமாறு யூனியன் கார்பைட் வலியுறுத்தியதாகத் தெரிகிறது. கடந்த ஜூன் மாதம் போபால் ஆலையைப் பற்றி விவரமான ஒரு கட்டுரையை எழுதினார் கம்யூனிஸ்டும், ஷிந்தி நாளிதழ் ஜனஸத்தாவுக்கு எழுதுபவருமான ராஜ்குமார் கேஸ்வானி. ''இதைப்பற்றியெல்லாம் அரசுக்குத் தெரியாது என்பதில்லை. ஒவ்வொரு விபத்துக்கும் பிறகு விசாரணை நடத்துவது பற்றி மத்திய பிரதேச அரசு பேசும். ஆனால் விசாரணை முடிந்து என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது என்று யாருக்கும் தெரியாது. விசாரணை நடந்ததா என்பது கூடத் தெரியாது'' என்று கட்டுரையை முடித்திருந்தார் கேஸ்வானி.

கடந்த சில ஆண்டுகளாக ஒரு உள்ளூர் அதிகாரி பூச்சிக்கொல்லி ஆலையினால் நேரக்கூடிய ஆபத்துக்களைச் சுட்டிக்காட்டி கவனம் ஈர்த்தார். அவர் சட்டசபை உறுப்பினரும் கம்யூனிஸ்ட் கட்சிப் பிரதிநிதியுமான மஹேந்திர கர்மா. 1981, 82-ல் கர்மா எச்சரிக்கைக் குறைவை எதிர்த்துத் தனியொருவராகப் போராடினார். ஆனால் சக அரசியல்வாதிகள் தொடர்ந்து அவரை அலட்சியப்படுத்தினர். சட்டசபை விவாதம் ஒன்றில், இந்திரா காங்கிரஸ் க்ரூப்பினரும், தொழில்துறை மந்திரியுமான தாராசிங் வியோகியுடன் சூடான வார்த்தைப் பரிமாற்றம் நடந்தது. ''250 மில்லியன் ரூபாய்களை இந்தத் தொழிற்சாலையில் முதலீடு செய்துள்ளோம்'' என்று விவாதித்தார் வியோகி. ''தொழிற்சாலை ஒன்றும் சின்ன கல் இல்லை, நினைத்த இடத்தில் நகர்த்தி வைக்க. போபாலுக்கு எந்த ஆபத்தும் இல்லை. இனிமேலும் இருக்காது!''

✖ வீடும் உறவும் இழந்து அனாதைகளாய்...



# அரசியல் பின்னணி

# முன்னணியில் முக்கியமானவர்

பெண் பாடகர்களைப் பொறுத்தமட்டில் ஒரு புதிய தலைமுறை உருவாகி வருகிறது. அவர்களுள் முன்னணியில் இருக்கும் திருமதி மணி கிருஷ்ணசாமியின் கணீரென்ற குரல் திங்கட்கிழமை 17-12-84 அன்று மாலை கிருஷ்ண கான சபை அரங்கில் ஒலித்து மகிழ்வித்தது. மாஞ்சியில் 'புரோவவம்மா' மனசை நிறைத்தது; இதயத்தைத் தொட்டது. இந்த ஸீஸனில் ஐந்து இடங்களில் பாடுகிறார் மணி. அவரது பேட்டி அவருடைய கச்சேரி போலவே ரசமாக அமைந்து விட்டதில் வியப்பில்லை.

**நீங்கள் எப்போது பாட ஆரம்பித்தீர்கள்?**

எம். எஸ். அவர்களின் சகுந்தலை, சேவாசதனம் போன்ற பிரபல திரைப்படப் பாடல்களை அப்படியே பாடுவேன். அப்போது எனக்கு ஐந்து, ஆறு வயது இருக்கும். விளையாட்டாகப் பொழுது போக்காகக் கேட்ட பாடல்களை பிளாட்டிங் பேப்பர் போல் உறிஞ்சிக் கொள்ளும் என் திறமையைக் கண்டு என் பெற்றோர்கள் என்னை வேலூர் ராமபத்திரனின் தகப்பனார் திருப்பாற்கடல் கோபாலாச்சாரியார் அவர்களிடம் அழைத்துச் சென்றார்கள். அவர் அந்த நாளில் வேலூரில் பிரபலமாய் இருந்த எல்லையாவிடம் நான் முறையாகப் பாட்டு கற்றுக் கொள்ள ஏற்பாடு செய்தார்.

**உங்கள் குடும்பம் சங்கீத குடும்பமா?**

சங்கீதத்தை ஆதரித்த குடும்பம். வேலூர் சங்கீத சபாவில் அப்போது பாடாத முன்னணிப் பாடகர்களே கிடையாது. எல்லாக் கச்சேரிகளையும் ஒன்று விடாமல் கேட்பேன். திருப்பாற்கடல் கோபாலாச்சாரியாரும் என் தந்தையும் இச்சபாவை முன்னின்று நடத்தி வந்தனர். அப்பா சபாவிற்குப் பணம் தேவைப்பட்டால் தன் கையை விட்டுச் செலவு செய்யும் அளவிற்குப் பாட்டுப் பிரியர். இத்தனைக்கும் அவருக்கு வீடு நிறைய மனிதர்கள். பெரிய குடும்பத்தை நடத்த வேண்டிய பொறுப்பு. . .

**பெற்றோரிடமிருந்து உங்கள் பாட்டுக்கு நல்ல ஆதரவு கிடைத்திருக்கும்?**

ஆதரவு மட்டுமில்லை. ரொம்பக் கட்டுப்பாடும் உண்டு. பாடினால் தான் சாப்பாடு! சரியாகப் பாடா விட்டால் அடி, உதை, பட்டினி!

**இத்தனை சின்ன வயதிலா? உங்களுக்கு வெறுப்பு ஏற்படவில்லையா?**

இல்லை. மாறாகச் சிரத்தை அதிகரித்தது. கச்சேரிகளைக் கேட்கும் போது எனக்கு மேடையேறிப் பாட வேண்டும் என்று உள்ளூற ஆசை ஏற்பட ஆரம்பித்தது. அப்போது எவாக்குவேஷன் சமயம் — பல பிரபல வித்வான்கள் வேலூருக்கு வந்து தங்கினர். இதனால் எனக்குப் பாட்டு கேட்கவும் கற்றுக் கொள்ளவும் வாய்ப்பு அதிகரித்தது. ஆர்வமும் அதிகரித்தது.

**முதல் கச்சேரி...?**

பன்னிரண்டாவது வயதில் மேடையேறினேன். காரணகர்த்தா திருப்பாற்கடல் கோபாலாச்சாரியார்தான். வேலூர் சங்கர மடத்தில் சுமார் இரண்டு மணி நேரம் கச்சேரி. மறக்க முடியாத மற்றொரு விஷயம்: எம். எஸ். அவர்கள் ஒரு பொது



○ "என் இசைக்குக் கடுமையான விமர்சகர் என் கணவரே"






○ ருக்மிணிதேவி. ○ டைகர் வரதாச்சாரியார் ○ பூதலூர் கிருஷ்ணமூர்த்தி ○ மைசூர் வாசுதேவாச்சாரியார்

—கலாக்ஷேத்ரா ஆசான்கள்

நிகழ்ச்சியில் கலந்து கொள்ள வேலூர் வந்திருந்தார். அந்நிகழ்ச்சிக்கு என்னை இறைவணக்கம் பாடச் சொன்னார்கள். சின்னப் பாட்டாகப் பாட வேண்டாமோ? நான் பாட்டுக்கு மாமவ பட்டாபிராம பாடினேன்! அமைதியாகக் கேட்டுக்கொண்டிருந்து விட்டு இன்னொரு பாட்டும் பாடச் சொன்னார் எம்.எஸ்.! எனக்கு ஒரே பரவசம். அவரது ஆசி பெற்ற அந்த நிகழ்ச்சியை எனது இரண்டாவது அரங்கேற்றமாகவே கருதுகிறேன்.

**அந்தப் பருவத்தில் நீங்கள் முன்னணிப் பாடியாக வருவீர்கள் என்பதற்கு ஏதேனும் அறிகுறி இருந்ததா?**

எனக்கு அப்படி ஒன்றும் தெரியவில்லை... (கணவர் முகத்தைப் பார்த்தார் மணி. கிருஷ்ணசுவாமியோ, தமக்கு அந்தக் கால கட்டம் பற்றித் தெரியாது என்று கைவிரித்து விட்டார்.) மணி தொடர்ந்தார்: ''பள்ளி இறுதிப் பரீட்சைக்காகவும் இரு. எல்லையா காலமானதாலும்சிறிது காலம் பாட்டு நின்று விட்டது. பிறகு. 1947—இல் சென்னைக்குக் குடி பெயர்ந்தோம். கலாக்ஷேத்திரத்தில் சங்கீத சிரோமணி வகுப்பில் சேர்ந்தேன். அப்போது டைகர், மைசூர் வாசுதேவாச்சாரியார், பூதலூர் கிருஷ்ணமூர்த்தி, முடிகொண்டான் ஆகியோரிடம் பாடம் கேட்ட பிறகு தான் கச்சேரி செய்யும் திறன் ஓரளவு ஏற்பட்டது எனலாம். அது கூட என் குருமார்கள் என்னிடம் தனி அக்கறை காட்டி ஊக்கம் அளித்ததால் தான் நம்மிடம் ஏதோ சரக்கு இருக்கிறது என்று எனக்குத் தோன்ற ஆரம்பித்தது.

**கலாக்ஷேத்திரா நாட்கள் எப்படி இருந்தன?**

அதிகாலை ஐந்து மணிக்கே குளித்துவிட்டு வகுப்புக்குத் தயாராகி விட வேண்டும். அகார சாதகம் மணிக் கணக்கில் செய்ய வேண்டும். ருக்மிணி தேவி குரலைப் பக்குவப் படுத்த (வாய்ஸ் கல்ச்சர்) வகுப்புகள் நடத்துவார். மூச்சை எங்கெங்கு அடக்கி எங்கெங்கு விட்டு எப்படிக் குரல் எழுப்ப வேண்டும் என்றும் சொல்லித் தருவார். அதோடு தியரி வகுப்புகள் வேறு. இப்படியெல்லாம் நான் முழுவதும் சங்கீதமே சிந்தனையாய் இருந்தது. புடம் போடப்பட்டு வெளிவந்தேன்.

**கல்யாணம் என்ற பேச்சு வந்ததும் சங்கீதத்துக்குப் பாதகம் ஏற்படும் என்று பார்த்தீர்களா?**

ஆமாம். ரொம்பப் பயப்பட்டேன். ஆனால் தெய்வாதீனமாய் என் கணவரும், அவர் குடும்பத்தினரும் எனக்கு எல்லா விதத்திலும் ஊக்கம் அளித்தனர். மாமியாரும், ஓர்ப்படிகளும், நாத்தனார்களும் என்னை வீட்டு வேலை செய்ய விடாமல் தாமே இழுத்துப் போட்டுக் கொண்டு செய்தனர். நான் பாட உட்கார்ந்தால் மாமியார் என்ன வேலை செய்து கொண்டிருந்தாலும் அதை நிறுத்திவிட்டுக் கேட்க வந்து விடுவார். மாமனாரும் விருத்தங்களை எந்தெந்த ராகங்களில் பாடினால் பொருத்தமாக இருக்கும் என்று யோசனைகள் கூறுவார். கச்சேரி முடிந்து வந்தால் திருஷ்டி சுற்றிப் போடுவார்கள்! அதிகாலையில் நவக்கிரஹ கீர்த்தனை பாடிய பிறகே கணவருக்குக் காபி கொடுக்கும் பழக்கம் ஏற்பட்டு விட்டது. இதனால் இதற்குக் காப்பி பாட்டு என்றே பெயர் எங்கள் வீட்டில்!

**கணவரைப் பற்றிச் சொல்லவில்லையே?**

அவர் தான் என் இசைக்கு மிகக் கடுமையான விமர்சகர். சில நேரங்களில் நான் இனி பாடவே மாட்டேன் என்று கையெடுத்துக் கும்பிட்டு விடும் அளவுக்கு அவரது சொற்கள் என்னைப் பாதித்து விடும். ஆனால் என் முன்னேற்றத்துக்காக அவர் தன் தொழில் வாழ்வில் பல தியாகங்களைச் செய்திருக்கிறார். பணமும், பெயரும், அந்தஸ்தும் அளிக்கக் கூடிய சில பதவிகள் (அயல் நாட்டில்) அவருக்குக் கிடைக்க வாய்ப்பிருந்த போதும் என் இசை வாழ்வை அது பாதித்து விடுமே என்பதற்காக அவற்றை அவர் ஏற்கவில்லை.

**உங்களுக்கு ஊக்கமளித்து முன்னேற உதவியவர்கள் என்று யாரையேனும் குறிப்பிட விரும்புவீர்களா?**

○ டி.கே.ஜெயராம ஐயர்: நுணுக்கங்களை உணர்ந்து பாட...



○ மூசிரி: வித்தியாசமான குருகுலவாசம்.



நிறையப்பேர் ஊக்கமளித்திருந்தாலும் யாரும் என்னை எந்த சபாவுக்கும் சிபாரிசு செய்ததில்லை.

ஏன், டாக்டர் ராதாகிருஷ்ணன் கூட என் கணவர் குடும்பத்துக்கு நெருங்கிய நண்பர்தான். டில்லியில் நாங்கள் இருந்த போது எங்களை அடிக்கடி அழைத்து என்னைப் பாடச் சொல்லிக் கேட்டு மகிழ்வார். ஒருமுறை அ. இ. ரே. நேஷனல் புரோகிராம் —பார்வையாளர் முன்னிலையில். பயத்தில் இரண்டு நிமிடங்களுக்கு எல்லாம் மறந்து போனது போல் பிரமை. சற்று சுதாரித்துக் கொண்டு பாட ஆரம்பித்தேன். நிகழ்ச்சியை வானொலியில் கேட்ட டாக்டர் ராதாகிருஷ்ணன் என் நிலையை உணர்ந்து கொண்டு விட்டார். மறுநாள் 'நீ நடுங்கிப் போய் விட்டாயோ?' என்று கனிவுடன் என்னை விசாரித்தார். இப்படி பலரது ஆசிகளும், அன்பும் எனக்குக் கிட்டியிருந்தாலும் எனது படிப்படியான முன்னேற்றத்தில் குறுக்கு வழியே ஏதுமில்லை.

**நேஷனல் ஸ்காலர்ஷிப் பெற்று முசிரி அவர்களிடம் பயின்றீர்கள் அல்லவா?**

ஆமாம். அது ஒரு வித்தியாசமான குருகுலவாசம். காலை எட்டு மணி அளவில் அவர் வீட்டுக்குப் போய் விடுவோம். மாலை இருட்டும் வரை கூடப் பாடம் நடத்துவார். பசி, தாகம், கூடப் பார்க்க மாட்டார். அவர் மனைவி மிக்க அன்புடன் இடையில், வகுப்பை நிறுத்தி எங்களை அழைத்துப் போய்த் தயிர்சாதத்தைப் பிசைந்து கையில் உருட்டிக் கொடுப்பார். நாங்கள் குருவுக்குச் சேவை செய்வதற்குப் பதில் அவரும் அவர் குடும்பத்தாரும் எங்களுக்குச் சேவை செய்தனர். வகுப்பு முடிந்ததும் பெண் சிஷ்யைகள் என்பதால் எங்களை அவரவர் வீட்டிலே தாமே காரில் கொண்டு விடுவார். பெரிய ஊர்வலமாய்ச் சென்னையையே ஒரு வட்டம் அடிக்க வேண்டியிருக்கும்! பாட்டுச் சொல்லித் தருவதிலும் அவருடைய பொறுமையும் விடா முயற்சியும் யாருக்கும் வராது. ஒரு கிருதியைக் கச்சிதமாகப் பாடும் வரை மாதக் கணக்கில் கூடச் சொல்லித் தருவார். ஏன், ஒரே வரியை, —ஒரு சங்கதியைக் கூட நாள் கணக்கில் திரும்பத் திரும்பப் பாடச் செய்வார், தாமும் பாடுவார்.

**முசிரி தங்களை மனம் நிறைந்து பாராட்டியதோ அல்லது தவறைச் சுட்டிக் காட்டியதோ உண்டா?**

நிறைய செய்திருக்கிறார்.. மறக்க முடியாதது என்னவென்றால் — கச்சேரி செய்வதற்கு அ. இ. ரே. யிலிருந்தும் பிற இடங்களிலிருந்தும் வரும் அழைப்புக்களை எனக்குக் காண்பிப்பார். ஸ்காலர்ஷிப்பில் பயின்று கொண்டிருந்ததால் அவர் முகவரிக்குத்தான் அவை வரும். ஆனால் பூர்த்தி செய்து அனுப்ப விடமாட்டார். கச்சேரி செய்யும் அளவிற்கு முதிர்ச்சி ஏற்படவில்லை என்பார்.

தான் என்பதை மீறி இசையோடு ஒரு அத்துவைத நிலையை அடைய வேண்டும் என்று எடுத்துக் கூறி அது சாத்தியம் என்று எனக்குக் காட்டியது முசிரிதான். அதே போல் இசையின் நுணுக்கங்களை உணர்ந்து கட்டுப்பாட்டுடன் பாடச் சொல்லிக் கொடுத்தவர் டி. கே. ஜெயராம ஐயர். முசிரி காலமான பிறகு இவரிடம் சில வருட காலம் கற்றுக் கொண்டேன்.

**எம். எஸ்., டி. கே. பி., எம். எல். வி. ஆகியோரின் சங்கீதத்திலுள்ள தலைசிறந்த பண்புகளை உங்கள் பாட்டில் காணலாம் என்று சுப்புடு ஒருமுறை சொல்லியிருக்கிறாரே?**

விமர்சனங்கள் என்னை அதிகம் பாதிக்காமல் பார்த்துக் கொள்கிறேன். நான் போக வேண்டிய தூரம் இன்னும் நிறைய இருக்கிறது.

பேட்டி: **தமயந்தி, சீதா ரவி**

புகைப்படம்: பின் அட்டை

வண்ணப்படம்: **உத்ரா**

## வசிஷ்டர் வாயால்



**செம்மங்குடி சொல்கிறார்:**

இன்று கச்சேரி செய்து கொண்டிருக்கும் முன்னணிப் பெண் பாடகர்களுள் முக்கியமானவர் மணி கிருஷ்ணசுவாமி. அவர் பாட்டை நான் ஆரம்ப நாளிலிருந்தே கேட்டு வருகிறேன். மைசூர் வாசுதேவாச்சாரியாரிடம் கற்றுக் கொண்டிருந்த போதும் சரி, நேஷனல் ஸ்காலர்ஷிப் பெற்று முசிரி அவர்களிடம் பயின்ற போதும் சரி, அதீத சிரத்தையுடன் கற்றுக் கொள்வார். இயற்கையாகவே தேன் போன்ற சாரீர பாக்கியமும், அதிர்ஷ்டவசமாக பல பெரும் பாடகர்களின் பாடாந்திரமும் இவருக்குக் கிடைத்துள்ளன. அதையெல்லாம் அழகாகப் பயன்படுத்திக்கொண்டு அளவோடு, கச்சிதமாகப் பாடி வருகிறார்.

மாணவ, மாணவிகளைத் தம் வீட்டுக் குழந்தைகள் போல் உரிமையுடன் அதட்டியும், மிரட்டியும் கூடத் திருத்துவார், முசிரி. இந்தக் கட்டுப்பாட்டுடன் கூடிய ஏறக் குறைய குருகுலவாசம்போன்ற—பயிற்சியின் பெருமை இன்று மணி கிருஷ்ணசுவாமியின் பாட்டில் மிளிர்கிறது.

சங்கீதத்தில் அபிவிருத்தி செய்து கொண்டே இருக்கலாம் — இருக்க வேண்டும். இதை மணி கிருஷ்ணசுவாமியுடன் எல்லா பாடகர்களுக்கும் நினைவூட்ட விரும்புகிறேன்.

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032· (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani Editor: K. Rajendran



PHILIPS

# An exciting new composition. Arrangement by Philips.



The Philips Rack System is a perfectly compatible, technically superior and an aesthetic combination that brings you pure and powerful sound.



## 300 watts of undistorted power

That's AH 824. One of the best amplifiers available in the country today. With the most sophisticated features – like wide frequency response from 30 Hz to 20 kHz. Active tone control.

**The Electronic Turntable**

AF 834. Stroboscope with pitch control. Electronic motor control. And auto return.

**The Dolby Deck**

F 6121. The cassette deck with servo touch and metal compatibility.

**3 way 3 Speaker bass-reflex system**

AH 426 speakers with five segment LED bar graph to indicate power.

If music really means something to you, you've to listen to the Philips Rack System. Walk into the nearest Philips dealer's showroom and ask for a demonstration.

Philips – the trusted Indian household name for over fifty years

OBM/1787

